6 வார அதிரடி தொடர்

"அப்பா...!''

சோபாவுக்கு சாய்ந்து உட்கார்ந்து கண்களை மூடியிருந்த பைரவமூர்த்தி ஸ்லோமோஷனில் கண்களைத் திறந்தார். அடர்த்தியான நரைத்த புருவங்களுக்குக் கீழே அவருடைய இரண்டு கண்களும் அனல் துண்டுகளாய் மின்னின. தனக்கு முன்பு ஒரு கல்தூணைப் போல் ஆறேகாலடி உயரத்தில் நின்றிருந்த மூத்த மகன் வஜ்ரவேலை ஒரு பெருமூச்சோடு ஏறிட்டார்.

"என்ன...?"

"நம்ம ஜோசியர் அம்பாள் அடிமை வந்திருக்கார்."

''வரச்சொல்லு...! உன் தம்பி ராஜவேல்



கிட்டேயிருந்து ஏதாவது போன் வந்ததா....?"

"இல்லேப்பா...!"

''அந்த வேலைக்கு நீ போயிருக்கணும்...! சரி... நம்ம ஜோசியரை வரச் சொல்லு. அவர் என்ன சொல்றார்ன்னு பார்ப்போம்..."

"சரிப்பா...!" என்று சொன்ன வஜ்ரவேல் அந்த அறையை விட்டு வெளியேறி, அடுத்த நிமிஷத்தின் ஆரம்பத்தில் அம்பாள் அடிமை ஜோதிடரோடு உள்ளே வந்தான்.

ஜோதிடருக்கு எண்பது வயதுக்கு மேல் இருக்கும். பளீரென்ற வெண்மையில் தாடியும் மீசையும் அவருடைய அகலமான முகத்தின் பாதிப் பரப்பை ஆக்ரமித்திருக்க, ஒரு பெரிய குங்குமப் பொட்டு நெற்றியின் மையத்தில் ஓர் அதிகாலைச் சூரியனைப் போல் தெரிந்தது. இடுப்புக்கு காவி வேட்டியைக் கொடுத்து, மஞ்சள் துண்டால் உடம்பைப் போர்த்தியிருந்தார். எழுந்து நின்று கும்பிட்டார் பைரவ மூர்த்தி.

"வாங்க ஜோதிடரே...!"

"மூகாம்பிகை கோயிலுக்குப் போறதுக்காக புறப்பட்டுக்கிட்டு இருந்தேன். தம்பி வஜ்ரவேல் கிட்டேயிருந்து போன் வந்தது. ஏதோ அவசரம்ன்னு சொன்னதால போட்டது போட்டபடி உடனே புறப்பட்டு வந்தேன். என்ன விஷயம்...? முகத்தைப் பார்த்தா பெரிய வருத்தத்தில் இருக்கிற மாதிரி தெரியுது..."

''மொதல்ல உட்காருங்க ஜோதிடரே!"




அம்பாள் அடிமை ஜோதிடர் குழப்பத்தோடு எதிரில் இருந்த சோபாவில் உட்கார, பைரவமூர்த்தி மகனிடம் திரும்பினார்.

''வஜ்ரவேல்...! வேலைக்காரங்க யாரும் இந்த அறைப் பக்கம் வராதபடி பார்த்துக்க..."

"சரிப்பா" என்று தலையாட்டியவன் அறையின் வாசலருகே போய் நின்று கொள்ள, பைரவமூர்த்தி தளர்வோடு தன்னுடைய இருக்கைக்கு சாய்ந்தார். அம்பாள் அடிமை மெல்லப் பேச்சை ஆரம்பித்தார்.

''விஷயம் ஏதோ பெரிசாய் இருக்கும்போல் தெரியுது!"

“பெரிசு மட்டும் இல்லை ஜோதிடரே... விபரீதமான விஷயமும் கூட.”

“விஷயம் என்னான்னு சொல்லுங்க!”

பைரவமூர்த்தி குரலைத் தாழ்த்திக் கொண்டார். “எம் பொண்ணு பூமொழி வீட்டை விட்டு ஓடிப் போயிட்டா. எவனோ ஒருத்தனை விரும்பியிருக்கா. அவன் வேற ஜாதியாம். வீட்ல நானும் அவளோட அண்ணன்களும் ஒத்துக்க மாட்டோம்னு நினைச்சு இன்னிக்கு காலங்கார்த்தாலே ஒரு லெட்டரை எழுதி வெச்சுட்டு ஓடிப்போயிட்டா. சின்ன வயசிலேயே அம்மாவை இழந்த பொண்ணுன்னு செல்லம் கொடுத்து அவளை சுதந்தரமாய் வெளியே அனுப்பி வெச்சது எவ்வளவு பெரிய தப்புன்னு இப்பத்தான் தெரியுது. விஷயம் இன்னமும் வெளியே யார்க்கும் தெரியலை. தெரியறதுக்கு முந்தி அவளையும் அவனையும் கண்டுபிடிக்கணும். அவன் யாராய் இருந்தாலும் சரி, எம் பொண்ணோட கண்ணுக்கு முன்னாடியே அவனை ரெண்டு துண்டா வெட்டிப் போடணும்...!”

**“எம் பொண்ணு பூமொழி வீட்டை விட்டு ஓடிப் போயிட்டா!”**

அம்பாள் அடிமை ஜோதிடர் சில விநாடிகள் வரை மௌனமாய் இருந்துவிட்டு பிறகு மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார். “நான் போன ஆறு மாசத்துக்கு முந்தி உங்க பொண்ணு பூமொழியோட



ஜாதகத்தைப் பார்த்துட்டு பாப்பாவுக்கு இப்போ நடக்கிற தசா புக்தியும், கோச்சாரமும் சரியில்லை. ஒரு ஆறுமாச காலத்துக்கு ரொம்பவும் ஜாக்கிரதையா இருக்கணும்னு சொல்லியிருந்தேன். அப்படி நான் சொன்னதை நீங்க சீரியஸா எடுத்துக்கலை போலருக்கு...!"

"இப்படி ஒரு மோசமான சம்பவம் நடக்கும்னு நீங்க சொல்லலையே?"

''மோசமான சம்பவம்ன்னா இப்படித்தான் நடக்கணும் என்பதில்லை. எப்படி வேணுமின்னாலும் நடக்கலாம். உங்க பெண் பூமொழியோட நடவடிக்கைகளை




நீங்களும் சரி, உங்க மகன்களும் சரி, சரியான முறையில் கவனிக்கத் தவறிட்டீங்கன்னு நினைக்கிறேன்."

"ஜோதிடரே! நான் உங்களை இங்கே கூப்பிட்டது நடந்து போன விஷயங்களைப் பத்தி பேசறதுக்காக இல்ல, இனிமே என்ன பண்ணலாம்? நம்ம பொண்ணு திரும்பவும் நம்ம வீட்டுக்குத் திரும்பி வர்ற வாய்ப்பு இருக்கா இல்லையான்னு அவளோட ஜாதகத்தைப் பார்த்து சொல்லத்தான்...!"

"எனக்குத்தான் உங்க பொண்ணு பூமொழியோட ஜாதகம் மனப்பாடமா இருக்கே... கட்டம் போட்டு பார்த்து சொல்லிடறேன்!" சொன்னவர், தன் கையோடு கொண்டு போயிருந்த மஞ்சள் பையிலிருந்து ஒரு நோட்டுப் புத்தகத்தையும் பேனாவையும் எடுத்துக் கொண்டார். பரபரவென்று பன்னிரண்டு ராசி கட்டம் போட்டு ஒன்பது கிரகங்களையும் அதில் குடியமர்த்தினார். தசாபுக்தி நாட்களைக் கணக்கிட்டார். வருஷம், மாதம், நாட்கள் என்று தனித்தனியாய் பிரித்து வந்த எண்களைக் கூட்டினார். கழித்தார். சில எண்களைப் பெருக்கி வகுத்தார்.

கிட்டத்தட்ட பத்து நிமிஷங்களுக்குப் பிறகு தன்னையே பார்த்துக் கொண்டிருந்த பைரவமூர்த்தியை ஏறிட்டார்.

''உங்க பொண்ணு பூமொழி வீட்டுக்குத் திரும்பி வர்றதுக்கான வாய்ப்பு இருக்கு. ஆனா...!"

"சொல்லுங்க... ஜோதிடரே!"

"குறைச்சலான அவகாசம்தான் இருக்கு. அந்த அவகாசத்துக்குள்ளே

கண்டுபிடிச்சு பொண்ணைக் கூட்டிட்டு வந்துட்டா அதுக்கப்புறம் பொண்ணு வீட்டுப்படியைத் தாண்டமாட்டா. உங்க பேச்சுக்கு மறுபேச்சு பேசமாட்டா. அதுக்கப்புறம் எல்லாமே நல்லபடியா நடக்கும்."

பைரவமூர்த்தி நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"நிஜமாவா சொல்றீங்க?"

ஜோதிடர் அம்பாள் அடிமை புன்னகைத்தார். "நானும் பொய் சொல்ல மாட்டேன். நான் படிச்ச ஜோசியமும் பொய் சொல்லாது. ஆனா குறைச்சலா இருக்கிற அந்த அவகாசம்தான் மனசுக்கு கொஞ்சம் நெருடலாய் இருக்கு..."



''குறைச்சலான அவகாசம்ன்னா எவ்வளவு?"

''இன்னும் இருபத்தேழு மணி நேரம். ரொம்பவும் துல்லியமாய் சொல்லணும்ன்னா 27 மணி நேரம் 46 நிமிஷம் 40 விநாடி. அதாவது ஒரு லட்சம் விநாடிகள்."

பைரவமூர்த்தி திகைத்தார்.

"இது என்ன கணக்கு...?"

**"இன்னும் 27 மணி நேரம் 46 நிமிஷம் 40 விநாடிதான் இருக்கு!"**

''ஜோதிட ரீதியாய் சொல்லணும்ன்னா கும்பராசியில் இருக்கும் செவ்வாய் மீன ராசிக்குப் போக இன்னும் 27 மணி நேரம் 46 நிமிஷம் 40 விநாடி இருக்கு. இதை நான் சொல்லிட்டு இருக்கும்போதே விநாடிகள் குறைஞ்சிட்டு இருக்கு. செவ்வாய் மீன ராசிக்குப் போயிட்டா விருச்சிக ராசியில் இருக்கும் குருவோட பார்வை செவ்வாய்க்கு கிடைச்சுடும். செவ்வாயை குரு பார்த்துட்டா குருமங்கள யோகம் வந்துடும். அதுக்கப்புறம்



பூமொழியை அந்தப் பையன் கிட்டேயிருந்து பிரிக்க முடியாது. உங்க பொண்ணு உங்களுக்கு வேணும்ன்னா நான் சொன்ன அவகாச நேரத்துக்குள்ளே பூ மொழியைக் கண்டுபிடிச்சு நம்ம வீட்டுக்குக் கொண்டு வந்துடணும்...!''

கதவருகே நின்று இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வஜ்ரவேல் இரண்டே எட்டில் பாய்ந்து ஜோதிடர்க்குப் பக்கத்தில் வந்து நின்றான்.

''ஜோதிடரே! எனக்குக் கிடைச்ச தகவல்களின்படி அந்தப் பையனும் பூமொழியும் இந்த கோயமுத்தூர் எல்லையை விட்டு இன்னும் தாண்டலை. நான் அஞ்சரை மணிக்கெல்லாம் கண் விழிச்சு சிட்அவுட் பக்கம் வந்தபோது பூமொழி அவளோட அறை ஜன்னல் அருகே நின்னுட்டிருந்தா. குட்மார்னிங் சொன்னா. நானும் பதிலுக்கு குட்மார்னிங் சொல்லிட்டு மொட்டை மாடிக்கு எக்சர்சைஸ் பண்ணப் போனேன். அடுத்த அரைமணி நேரத்துக்குள்ளே அப்பா பதட்ட நடையோடு பூ மொழி எழுதி வெச்சுட்டுப்போன லெட்டரோடு வந்தார். நான் உடனே எனக்குத் தெரிஞ்ச ஒரு உயர் போலீஸ் அதிகாரியை காண்டாக்ட் பண்ணி விஷயத்தைச் சொல்ல, அவரும் உடனே மஃப்டியில் போலீஸ் படையை சிட்டியோட நாலா திசைக்கும் அனுப்பிவிட்டார். பூமொழியோட போட்டோ வாட்ஸ் அப் மூலமா எல்லார்க்கும் போயிட்டதால அவங்க ரெண்டு பேரும் தப்பிக்க முடியாது... நானும் அப்பாவும் ஜோசியத்தை நம்பறதுக்குக் காரணம் நீங்க இதுவரைக்கும் எங்க குடும்பத்துக்கு சொன்னதெல்லாம் பலிச்சுட்டு வந்திருக்கு இதுவும் கண்டிப்பா பலிக்கும். நீங்க சொன்ன இந்த அவகாசம் எங்களுக்குப் போதும். பூ மொழியை வீட்டுக்குக் கொண்டு வந்துடுவோம்...'' வஜ்ரவேல் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பைரவமூர்த்தியின் செல்போன் மெலிதாய் சிணுங்கியது.

எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார். இரண்டாவது மகன் ராஜவேல்.

செல்போனின் டச் ஸ்கிரீனைத் தேய்த்துவிட்டு சற்றே பதட்டத்தோடு இடது காதுக்குக் கொடுத்தார்.

''சொல்லு ராஜவேலு...''

''அப்பா! நான் இப்போ அவிநாசி ரோடு பீளமேடு ஏரியாவில் இருக்கேன். நம்ம பூமொழியைக் காதலிச்ச பையன் யார்ன்னு தெரிஞ்சிடுச்சு. பேரு சர்வேஷ். படிச்ச பையன்தான். எங்கே வேலைக்குப் போறான்னு தெரியலை. நம்ம ஜாதி கிடையாது. கேரளாப் பக்கம் ஏதோ ஒரு ஊரு... அப்பா கிடையாது. அம்மா மட்டும்தான்.''

"இந்த விவரம் எல்லாம் உனக்கு யார் சொன்னது...?"

"பூமொழியோட பழைய தோழி ஒருத்தி ஊர்மிளான்னு பேரு. கொடீசியா வளாகத்துக்குப் பக்கத்துல இருக்கிற ஒரு லேடீஸ் ஹாஸ்டல்ல தங்கி இருக்கிறது தெரிய வந்தது. போய் விசாரிச்சேன். அவளுக்கு சர்வேஷைப் பத்தி போதுமான அளவு தகவல்கள் தெரியலை..."

''பூமொழியோட மத்த ஃப்ரெண்ட்ஸ் யார்ன்னு அவகிட்ட கேட்டியா?"

"கேட்டேன்....! தெரியலைன்னு சொல்றா. ஊர்மிளா பொய் பேசற மாதிரி தெரியலைப்பா....! சரியான தகவலுக்கு இனி வேற பக்கம்தான் முயற்சி பண்ணணும்!"



''இதோ பார் ராஜவேலு! நீ என்ன செய்வியோ ஏது செய்வியோ எனக்குத் தெரியாது. நாளைக்கு மத்தியானம் பதினொரு மணிக்குள்ளே உன் தங்கச்சி பூமொழி நம்ம வீட்ல இருக்கணும். அந்த சர்வேஷோட உடல் ஜி.ஹெச்ல போஸ்ட் மார்ட்டத்துக்காக வெயிட் பண்ணிட்டு இருக்கணும்!"

"அப்பா! நீங்க இப்ப சொன்ன இந்த ரெண்டு நல்ல காரியங்களும் இன்னிக்கு சாயந்தரம் அஞ்சு மணிக்குள்ளே நடக்கும்."

"செய்!" என்று சொல்லி செல் போனை அணைத்த பைரவமூர்த்தி வஜ்ரவேலுவை ஏறிட்டார்.

"ஜோசியருக்கு ஒரு ஐயாயிரம் ரூபாய் பணத்தைக் கொடுத்து அனுப்பு."

"எனக்கு பணம் வேண்டாங்க... மொதல்ல பொண்ணு வீடு வந்து சேரட்டும்..." அம்பாள் அடிமை ஜோதிடர் எழுந்து கொண்டார். "நான் புறப்படறேன்" என்று சொன்னவர், ஏதோ சொல்ல முற்பட்டு தயங்கினார்.

''என்ன ஜோசியரே?"

''நம்ம பொண்ணு வீட்டுக்கு வந்த பின்னாடி அந்தப் பையனை மறந்துடுங்க. அவனை ஒண்ணும் பண்ணிடாதீங்க. யார் பெத்த புள்ளையோ பொழச்சுப் போகட்டும்!"

''ஜோசியரே!'' தனக்கு முன்னால் இருந்த டீபாயை ஓங்கிக் குத்தினார்

**"அவனோட உசுரை எடுத்துட்டுத் தான் எம் பொண்ணையே வீட்டுக்குக் கூட்டிட்டு வருவேன்!"**

பைரவமூர்த்தி. அதன் மேல் வைத்து இருந்த ஃப்ளவர் வாஷ் எகிறிப் போய் விழுந்தது. பைரவமூர்த்தி ஏறக்குறைய கர்ஜித்தார்.

''உங்களைக் கூப்பிட்டது ஜோசியம் பார்க்கத்தான். வந்தீங்க. ஜோசியம் பார்த்தீங்க. இனி போயிட்டே இருங்க. அந்தப் பையனோட ஆயுசு முடிஞ்சுது. அவனோட உசுரை எடுத்துட்டுத்தான் எம் பொண்ணையே வீட்டுக்குக் கூட்டிட்டு வருவேன்.''



''நான் தப்பா ஏதாவது சொல்லி யிருந்தா மன்னிச்சுக்குங்க.'' ஜோதிடர் நடுநடுங்கிப் போனவராய் வெளி யேறிக் கொண்டிருந்த விநாடி–

ஹாலின் மூலையில் இருந்த லேண்ட் லைன் டெலிபோன் குரல் கொடுத்தது. வஜ்ரவேல் வேகவேகமாய்ப் போய் ரிஸீவரை எடுத்தான்.

''ஹலோ...!''

''அது பைரவமூர்த்தி அய்யா வோட வீடுதானே?'' ஒரு ஆண்குரல் கேட்டது.

''ஆமா... நீங்க யாரு?''

''நான் யார்ங்கிறது முக்கியம் இல்லீங்க... அய்யாகிட்டே ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லணும்!''

''நான் அவரோட மகன்தான் பேசறேன்.''

''வஜ்ரவேலுவா... ராஜ வேலுவா...?''

''வஜ்ரவேலு...!''

''அய்யா... உங்ககிட்டயே விஷயத்தைச் சொல்லிடறேன்.''

''என்ன சொல்லு....?''

''உங்க தங்கச்சி பூ மொழியும், சர்வேஷும் ரெண்டுநாள் கழிச்சு காரமடை ரங்கநாதர் கோயில்ல வெச்சு கல்யாணம் பண்ணிக்கப் போறாங்க. இப்ப அவங்க எங்கே ஒளிஞ்சு இருக்காங்கன்னு தெரியுங்களாய்யா...?''

வஜ்ரவேலின் உடம்பு பதறியது.

''சொல்லு... சொல்லு...''

''வடவள்ளி தாண்டி கல்வீரம் பாளையத்துல பாரதி நகர், மூணாவது தெரு, ஏழாம் நம்பர் வீடு... முன்னாடி வீடு பூட்டியிருக்கும். பின்னாடிப் பக்கம் போனா வீடு திறந்து இருக்கும். லேட் பண்ணாமே போங்க...''

வஜ்ரவேல் ஒரு சிறிய சூறாவளி யாய் மாறினான்.

**(தொடரும்)**



6 வார அதிரடித் தொடர்

# ஒரு பட்சம் விநாடிகள்

**கா**ர் ஓர் ஏவுகணையாய் மாறி கோவை வேளாண் பல்கலைக்கழகத்தைக் கடந்து வடவள்ளியை நோக்கிப் போய்க் கொண்டிருக்க, காரின் பின்சீட்டில் நிலை கொள்ளாமல் உட்கார்ந்திருந்த பைரவமூர்த்தி டிரைவிங் சீட்டில் உட்கார்ந்திருந்த வஜ்ரவேலிடம் கேட்டார்.





• ராஜேஷ்குமார்

2

"உன்கிட்ட போன்ல பேசி விஷயத்தைச் சொன்னவன் யாரு?"

"தெரியலைப்பா. அவன் யாரு, என்னான்னு கேட்குறதுக்குள்ளே ரிஸீவரை வெச்சுட்டான்."

"கல்வீரம்பாளையத்துல எந்த நகர்...?"

"பாரதி நகர், மூணாவது தெரு, ஏழாம் நம்பர் வீடு."

"சரியான தகவல்தானா? போன்ல பேசினவன் பொய் சொல்லி

யிருக்கமாட்டானே...”

“இல்லேப்பா... அவன் பொய் பேசின மாதிரி தெரியலை. அவன் பேச்சுல ஒரு பதட்டம் தெரிஞ்சுது. நிச்சயமா நம்ம பூமொழியும், அந்தப் பையன் சர்வேஷும் அந்த வீட்ல இருந்ததை அவன் பார்த்துருக்கணும்.”

“ராஜவேலுவும் நானும் எதுக்கு இருக்கோம்... அதையெல்லாம் நாங்க பார்த்துக்கிறோம்பா...!”

கார் புதூரைத் தாண்டி அடுத்த ஐந்தாவது நிமிஷம் வடவள்ளியைக் கடந்து கல்வீரம்பாளையத்தைத் தொட்டது. வஜ்ரவேல் ஒரு பேக்கரி அருகே காரை நிறுத்தி வடையை மென்று கொண்டிருந்தவனிடம் கேட்டான்.

**தீவிர ரசிகர்!**

**“கபாலியெஸ்டர் துணி இருக்கா?”**

**“மிஸ்டர்... நீங்க ரஜினியோட தீவிர ரசிகரா இருக்கலாம். அதுக்காக இல்லாத ரகத்தைக் கேட்டுத் தொல்லை பண்ணாதீங்க. கிளம்புங்க.”**

**- எல். சேவுக பாண்டியன், ராதாபுரம்.**

“இதோ பார் வஜ்ரவேலு...! அந்த ரெண்டு பேரும் அங்கே இருந்தாங்கன்னா ஆத்திரப்பட்டு உன்னோட முரட்டுத்தனத்தைக் காட்டிடாதே... அவங்ககிட்டே நல்லவிதமாய்ப் பேசி மொதல்ல நம்ம வீட்டுக்குக் கூட்டிட்டு வரணும். அதுக்கப்புறம் நம்ம செம்மேடு தென்னந்தோப்புக்கு கொண்டுபோய் அவனை மட்டும் போட்டுத்தள்ளி காய்ஞ்ச தென்னம்மட்டைகளைப் போட்டு எரிச்சு சாம்பலாக்கி உரத்தோடு உரமா கலந்து தோப்பு பூராவும் தூவிடணும்.”

“பாரதி நகர் எங்கே இருக்கு?”

“நேராப் போங்க... ‘நால்வர் நகர்’ வரும். அதையொட்டி ரோடு ஒண்ணு உள்ளே போகும். அதிலேயே அரைகிலோ மீட்டர் தூரம் போனா பாரதி நகர் வரும். ரோடு கொஞ்சம் மோசமா இருக்கும். பார்த்துப் போங்க...!”

வடை வழிசொல்லி முடிப்பதற்குள் கார் பறந்தது. முப்பதே விநாடியில் நால்வர்

நகர் போர்டு தெரிய, அதையொட்டிய செம்மண் ரோட்டில் கார் புழுதி பறக்கத் திரும்பியது.

பைரவமூர்த்தி பொருமினார். "திருட்டு நாய்ங்க ரெண்டும் எங்க வந்து ஒளிஞ் சிட்டிருக்கு பாரு...!"

"அப்பா! அந்த சர்வேஷை அதே இடத்துல அடிச்சுக் கொல்லணும் போலிருக்கு...!"

"உன்கிட்ட எனக்குப் பிடிக்காததே இந்த மூர்க்கம்தான். கோபம் வரத்தான் செய்யும். ஆனா அதை நீறுபூத்த நெருப்பு மாதிரி அடக்கி வெச்சுக்கணும்... சரியான சமயம் பார்த்துத்தான் பயன்படுத்தணும். அந்த ரெண்டும் நம்ம கையில மாட்டின பிறகு நீ எதையும் பேசாதே. நான் பேசிக்கிறேன்!"

"பூமொழிக்கு நீங்க ரொம்பவும் செல்லம் குடுக்கப் போய்த்தான் இவ்வளவும்!"

"தப்பு என் பேரிலும் இருக்கு... அவளைக் கண்காணிக்கத் தவறிட் டேன்...!"

"அப்பா! பாரதி நகர் வந்தாச்சு...!" வஜ்ரவேல் சொல்லிக் கொண்டே காரின் வேகத்தைக் குறைத்தான்.

"வீடுங்க நிறைய இருக்கும் போலிருக்கே... எத்தனாவது தெரு...?"

"மூணாவது தெரு... ஏழாம் நம்பர் வீடு..."

"அஞ்சாவது தெரு இங்கே இருக்கு... இன்னும் கொஞ்சம் முன்னாடி போ...!"

கார் மெதுவாய் பார்த்துப் போக... பாரதி நகர் 3-வது தெரு பெயர்ப்பலகை வஜ்ரவேலுவின் பார்வைக்குத் தட்டுப்பட, காரைத் திருப்பினான். வரிசையாய் வீட்டு எண்களைப் பார்த்துக் கொண்டே போக... பெரிய காம்பௌண்ட் கேட்டோடு 7 என்று எண்ணிட்ட

## அவனை அதே இடத்துல அடிச்சுக் கொல்லணும்!



அந்த அழகான குட்டி பங்களா பார்வைக்குக் கிடைத்தது. கேட்டில் பித்தளைப் பூட்டொன்று அடித்த வெயிலில் மினுமினுப்பாய் தெரிந்தது.

“அப்பா! இந்த வீடுதான். போன்ல பேசினவன் சொன்ன மாதிரியே வீட்டோட முன்பக்கம் பூட்டியிருக்கு. வீட்டுக்குப் பின் பக்கம் போய் பார்த்துட வேண்டியதுதான்...”

இருவரும் காரைவிட்டு இறங்கினார்கள். வஜ்ரவேல் காம்பௌண்ட் கேட் அருகே போய் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த விநாடி அவனுடைய செல்போன் அழைத்தது.

ஒரு புது எண்.

காதுக்கு ஒற்றி “யாரு?” என்றான்.

“அண்ணா! நான்தான்...!” மறுமுனையில் பூமொழியின் குரல்... வஜ்ரவேல் பதட்டமடைந்தான்.

**“நீ, சின்ன அண்ணன், அப்பா, மூணு பேரும் மனுஷங்களா மாறணும்!”**

“பூ... பூ... பூமொழி நீயா... எங்கிருந்து பேசறே?”

“எங்கிருந்து பேசணுமோ அங்கிருந்து பேசிட்டிருக்கேன்... நீ இப்போ ஒரு வீட்டுக்கு முன்னாடி அப்பாவோடு நின்னுட்டிருக்கியே அந்த வீடு யாரோடது தெரியுமா...?”

“யா... யா... யாரோடது...?”

“நான் கல்யாணம் பண்ணிக்கப் போகிற சர்வேஷோடது. நான் வாழப் போற வீட்டை உங்களுக்கு காட்ட வேண்டாமா...? அதுக்காகத்தான் சர்வேஷ் உனக்கு போன் பண்ணி இங்கே வரச்சொன்னார். நாங்க உள்ளே இருக்கோம்ன்னு சொன்னாத்தானே நீயும் அப்பாவும் விழுந்தடிச்சுட்டு வருவீங்க? வீட்டைப் பார்த்தீங்களா? எப்படியிருக்கு... நேரம் இருக்கும்போது சின்ன அண்ணன் ராஜவேலுவையும் கூட்டிட்டு வந்து காட்டுங்க...!”

“என்ன, திமிரா...?”

“என்னண்ணா பண்றது... நம்ம ஜாதி ஃபைவ் ஸ்டார் ஜாதி... அதுக்குண்டான திமிர் இருக்கத்தானே செய்யும்...?”

“ஆம்பள ஒருத்தன் பக்கத்துல இருக்கான்கிற தைரியத்துல இப்ப நீ பேசிட்டிருக்க... அவன் உண்மையான ஆம்பளையா இருந்தா எனக்கு முன்னாடி வந்து நிக்கச் சொல்லு பார்க்கலாம்...”

“அவர் கண்டிப்பா உங்க





முன்னாடி வந்து நிக்கத்தான் போறார். அதுக்கு முன்னாடி நீ, சின்ன அண்ணன், அப்பா, மூணு பேரும் மனுஷங்களா மாறணும்!"

"ஏய்ய்...!" வஜ்ரவேல் பற்களைக் கடித்துக்கொண்டு ஏதோ கோபமாய் பேச முயல... பைரவமூர்த்தி அவனுடைய தோளைத் தொட்டார்.

"போனை என்கிட்ட குடு!"

"அவ என்ன பேச்சுப் பேசறா தெரியுமாப்பா...? செல்லம் குடுத்து வளர்த்ததுக்கு அவ பேசற ஒவ்வொரு வார்த்தையும் செருப்படி மாதிரி இருக்கு. இந்தா பேசுங்க...!"

வஜ்ரவேல் செல்போனை அவரிடம் கொடுத்துவிட்டு கார்க்கு சாய்ந்து கொண்டான். பைரவமூர்த்தி செல்போனை தன் இடது காதுக்கு கொடுத்து காட்டமாய் பேச்சை ஆரம்பித்தார்.

"என்னம்மா பூ மொழி...! உனக்கு புருஷன்னு ஒருத்தன் வேணும்ன்னு என்கிட்ட சொல்லியிருந்தா நம்ம சாதி சனத்திலிருந்து ஒரு நூறு பேரை நம்ம வீட்டுக்கு முன்னாடி கொண்டு வந்து நிறுத்தியிருப்பேனே... இப்படி அவசரப்பட்டு எவனோ ஒருத்தனை..."

"எவனோ ஒருத்தனை இல்லேப்பா... என் மனசுக்குப் பிடிச்ச ஒருத்தரைன்னு சொல்லுங்க...!"

"என்ன சாமர்த்தியமா பேசுறதா நினைப்பா... வீட்டை விட்டு ஓடிப்போறதுக்கு முன்னாடி நம்ம குடும்பத்தோட பாரம்பரியத்தை ஒரு நிமிஷம் நீ நினைச்சுப் பார்த்திருந்தா உன்னோட கால்கள் வீட்டு வாசற்படியைத் தாண்டியிருக்காது."

"நல்லவேளையாய் நான் நினைச்சுப் பார்க்கலை..."

"இதோ பார் பூமொழி...! இந்த கேலியும் கிண்டலும் இன்னும் சில மணி நேரங்களுக்குத்தான். அதுக்கப்புறம் நீ நிறைய அழவேண்டியிருக்கும்!"

"அப்பா! நான் உங்க பொண்ணு... வாழ்க்கையில் எந்தப் பிரச்னை வந்தாலும் அதை ஃபேஸ் பண்ணி ஜெயித்துக்காட்டணும்ன்னு சொல்லிக் கொடுத்ததே நீங்கதான்... அப்படியிருக்கும்போது என் கண்ணுல தண்ணி வரும்ன்னு நீங்க எப்படி நினைக்கலாம்...? நான் இப்போ சந்தோஷமாய் இருக்கேன்.

இத்தனை நாளும் உங்களுக்கு மகளாகவும், அண்ணன்களுக்கு தங்கச்சியாகவும் இருந்த நான் இப்போ எனக்குப் பிடிச்ச ஒருத்தர்க்கு மனைவியாகப்போறேன். தயவு பண்ணி ஜாதியையும் உங்க கௌரவத்தையும் காரணம் காட்டி என்னையும் அவரையும் பிரிச்சுடாதீங்க...”

“அதாவது ஓடிப்போன உனக்கு என்னோட ஆசிர்வாதம் வேணும். அப்படித்தானே...?”

“நான் ஓடிப்போகலைப்பா... உங்க கோபம் தணியட்டுமேன்னு கொஞ்சம் தள்ளி நின்னு நானும் அவரும் வெயிட் பண்ணிட்டிருக்கோம்.”

“பூமொழி! நம்ம குடும்ப கௌரவத்தைக் காப்பாத்தறதுக்காக நான் எந்த லெவலுக்கும் போவேன்னு உனக்குத் தெரியும். என்னையவிட உன்னோட அண்ணன்கள் ரெண்டு பேரும் ரொம்பவும் கோபமா இருக்காங்க...”



“அதை கோபம்ன்னு சொல்லாதீங்கப்பா. ‘கொலை வெறி’ன்னு சொல்லுங்க. எங்க ரெண்டு பேரைப் பார்த்ததும் நாலு துண்டாய் வெட்டிப் போடணும்ன்னு அரிவாளும் கையுமா சுத்திட்டு இருப்பாங்களே?”

“இவ்வளவையும் தெரிஞ்சு வெச்சுகிட்டு எப்படி உன்னாலே




இப்படியொரு காரியம் பண்ண முடிஞ்சது?”

“அதுக்குப் பேர்தான்ப்பா காதல்...! எனக்கு உங்க பணம் வேண்டாம். ஃபைவ் ஸ்டார் அந்தஸ்தோடு இருக்கிற நம்ம ஜாதி வேண்டாம். எல்லாத்துக்கும் மேலா என்னைப் பெத்து வளர்த்து ஆளாக்கின நீங்க வேண்டாம். என் கூடப் பொறந்த அண்ணன்கள் வேண்டாம். நான் விரும்பின ஒருத்தரோட வாழ எனக்கு அனுமதிகுடுங்க. உங்களாலோ அண்ணன்களாலோ எனக்கும்

சர்வேஷுக்கும் எந்த ஒரு பிரச்னையும் வரக்கூடாது."

"என்ன மிரட்டறியா...?"

"இது மிரட்டல் கிடையாது. வேண்டுகோள். நீங்களும் சமாதானமாகி அண்ணன்களையும் சமாதானப்படுத்த வேண்டியது உங்க கடமை."

**படிச்சவங்க!**

"நான் பேசின இடம் படிச்சவங்க ஏரியா போலிருக்கு!"

"எப்படிச் சொல்றீங்க தலைவரே?"

"நான் பேசும்போது என் மேல ஷூவா வந்து விழுந்துச்சே!"

எஸ். முகம்மது யூசுப்,
திருநெல்வேலி.

"இதோ பார் பூமொழி...! உங்க அண்ணன்கள் வேணும்ன்னா மனசு மாறி சமாதானமாகலாம். ஆனா நான் இந்தப் பிரச்னையை விடமாட்டேன். நீங்க ரெண்டு பேரும் எந்த விநாடி என்னோட பார்வைக்கு தட்டுப்படறீங்களோ அந்த விநாடியே உங்க ரெண்டுபேரோட ஆயுசும் முடிஞ்சுடும்..."

"அடேடே... பரவாயில்லையே... சமீபத்துல வந்த ஒரு தமிழ்ப் படத்தில்கூட ஹீரோயினோட காதலுக்கு எதிரியா வர்ற

**"உங்க ரெண்டு பேர்க்கும் தைரியம் இருந்தா எனக்கு முன்னாடி வந்து நின்னு பாருங்க..."**

அப்பா இதே மாதிரியான ஒரு டயலாக்கைத்தான் பேசறார். ஆனா கடைசியில் அவர் தோத்துப் போறார்."

"உங்க ரெண்டு பேர்க்கும் தைரியம் இருந்தா எனக்கு முன்னாடி வந்து நின்னு பாருங்க..."

"வரவேண்டிய நேரத்துல வந்து நிக்க வேண்டிய நேரத்துல உங்க மூணு பேரு முன்னாடியும் வந்து நிப்போம். அந்த சமயத்துல உங்க மூணு பேர் கையிலேயும் அரிவாள் இருக்காது. எங்களை ஆசிர்வாதம் பண்றதுக்கான அட்சதை அரிசிதான் இருக்கும். அந்த விநாடி வர்ற வரைக்கும் தள்ளி நிப்போம்... இப்ப வீட்டைப் பார்த்துட்டு கிளம்புங்க...!" மறுமுனையில் ஒரு சின்ன சிரிப்போடு பூமொழி பேச்சை முடித்துக்கொண்டு செல்போனை அணைத்துவிட பைரவமூர்த்தி கோபத்தில் முகம் சிவந்தவராய் அது தெரு என்றுகூட பாராமல் கத்தினார்.



**இளமை, புதுமை**
**எதிலும் முதன்மை**

நிறுவிய ஆசிரியர்
**எஸ்.ஏ.பி.**

நிறுவிய பதிப்பாளர்
**பி.வி. பார்த்தசாரதி**

சேர்மன் மற்றும் நிர்வாக இயக்குநர்
**பா. வரதராசன்**

அச்சிட்டு வெளியிடுபவர்
**பா. வரதராசன்**

ஆசிரியர்
க. ராமச்சந்திரன்
(ப்ரியா கல்யாணராமன்)

பொறுப்பாசிரியர்கள்
இரா. மணிகண்டன்
இளையரவி

தலைமை நிருபர்
க. ராஜிவ் காந்தி

துணைத் தலைமை நிருபர்
அன்வர்

உதவி ஆசிரியர்
கடற்கரய்

நிருபர் குழு
வீரகேரளம் சரவணன், சிந்துகுமார்,
அரண்மனை சுப்பு, அரவிந்த்,
ஜோசப், ம. அய்யனார் ராஜன்.

புகைப்படக் கலைஞர்கள்
சித்ராமணி, ஆர். சண்முகம்

**குமுதம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட், பழைய எண்.151 புதிய எண்.306, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10ல் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.**

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும், கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. பிரசுரமாகும் கதை, கட்டுரை மற்றும் படைப்புகள் அனைத்திற்கும் பதிப்பாளரே உரிமையாளராவார். மறுபிரசுரம் செய்வதோ, மற்ற வேறு வகையில் படைப்புகளை பயன்படுத்தவோ நிர்வாகத்தினரின் முன் அனுமதி பெற்றே செய்ய வேண்டும்.

பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்படும் படைப்புகளுக்கு பி.ஆர்.பி சட்டப்படி ஆசிரியர் குழுவே பொறுப்பு.

கதை, கட்டுரைகள் அனுப்ப வேண்டிய முகவரி :
தபால் பெட்டி எண் : 2592, சென்னை 600 031.
**தொலைபேசி எண் : 26422148**
**ஃபேக்ஸ் எண் : 26425041**
இ-மெயில் : edtl@kumudam.com

“டேய் வஜ்ரவேல்...! அந்த ஓடுகாலி எங்கேயிருந்தாலும் சரி, அடுத்த இருபத்தி நாலு மணி நேரத்துக்குள்ளே அவளைக் கண்டுபிடிக்கணும். அவள் கண் முன்னாடியே அந்த சர்வேஷை ரெண்டு துண்டா வெட்டிப்போடணும். அதுக்கப்புறமா அவளை வெட்டணும்... பொட்டக்கழுதை என்ன பேச்சு பேசறா...!”

“அப்பா... நீங்க டென்ஷன் ஆகாதீங்க... நாளைக்கு பொழுது விடியும்போது அந்த ரெண்டு பேரும் ரத்தச் சகதியில் உயிர் விட்டிருப்பாங்க. இப்ப கார்ல ஏறுங்க... அக்கம் பக்கத்துல இருக்கிறவங்க ஒரு மாதிரியா பார்த்துட்டு இருக்காங்க...”

கொந்தளிக்கிற மனசோடு காரில் ஏறி உட்கார்ந்தார் பைரவமூர்த்தி. மின்னல் வேகத்தில் கார் ரிவர்ஸ் எடுத்த வஜ்ரவேல் தன் ஒட்டுமொத்த கோபத்தையும் அதன்மீது காட்ட, கார் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பாய் மாறியது.

கார் வீட்டை நெருங்கியபோது வாசலில் போலீஸ் ஜீப் நிற்பதைப் பார்த்து முகம்மாறி டிரைவிங் சீட்டில் இருந்த வஜ்ரவேல் தோளின்மீது கையை வைத்தார் பைரவமூர்த்தி.

“என்னடா... நம்ம வீட்டு வாசல்ல போலீஸ் ஜீப்...?”

"அதாம்பா... எனக்கும் ஒண்ணும் புரியலை... நம்ம ஏசிபி இருங்கோவேள் வந்திருக்கார்ன்னு நினைக்கிறேன்...!"

கார், திறந்து இருந்த காம்பௌண்ட் கேட் வழியே உள்ளே போய் போர்டிகோவில் அடைக்கலமாக... பைரவமூர்த்தி வேகவேகமாய் இறங்கி உள்ளே போனார்.

ஹால் சோபாவில் அஸிஸ்டண்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ் இருங்கோவேள் உட்கார்ந்து இருக்க, வீட்டின் வேலையாட்கள் மௌனமாய் ஆங்காங்கே நின்றிருந்தார்கள். பைரவமூர்த்தி தன்னுடைய பதட்டத்தையெல்லாம் மறைத்துக்கொண்டு இயல்பான குரலில் கேட்டார்.

"என்ன ஏசிபி ஸார்... திடீர்ன்னு வந்திருக்கீங்க?"

"வரவேண்டியதாயிடுச்சு... இப்பத்தான் வந்தேன். உங்களுக்கு போன் பண்ணலாம்ன்னு நினைக்கும்போதே நீங்க வந்துட்டீங்க...!"

"நானும் வஜ்ரவேலுவும் ஒருத்தரைப் பார்க்கிறதுக்காக வெளியே போயிருந்தோம்... பை.. த.. பை... என்ன விஷயம்...?"

"உங்க ரெண்டாவது சன் ராஜவேலு இப்ப எங்கே?"

"வெளியே போயிருக்கான்!"

"எப்போ போனார்?"

# இருபத்தி நாலு மணி நேரத்துக்குள்ளே அவளைக் கண்டுபிடிக்கணும்!



"காலை ஏழுமணியிருக்கும்."

"நடுவில் ஏதாவது போன் பண்ணினாரா?"

"ஒரு தடவை போன் பண்ணினான். அதுக்கப்புறமா போன் பண்ணலை."

"இனிமே அவர் போன் பண்ணமாட்டார்."

"என்ன ஸார் சொல்றீங்க?"

"வெரி ஸாரி டு ஸே திஸ் மிஸ்டர் பைரவமூர்த்தி. உங்க சன் ராஜவேலு இப்போ உயிரோடு இல்லை. பாடி போஸ்ட்மார்ட்டத்துக்காக மார்ச்சுவரியில் வெயிட் பண்ணிட்டிருக்கு. போலாம்... வர்றீங்களா?"

**(தொடரும்)**

6 வார அதிரடித் தொடர்

# 10 லட்சம் விநாடிகள்

• ராஜேஷ்குமார்

பைரவ மூர்த்தியும், வஜ்ரவேலுவும் இருண்டு போன முகங்களோடும், எகிறும் இதயத் துடிப்புகளோடும் மார்ச்சுவரியை நோக்கிப் போய்க் கொண்டிருக்க, அஸிஸ்டெண்ட் போலீஸ் கமிஷனர் இருங்கோவேள் அவர்களுக்கு இணையாக நடந்து கொண்டே பேசினார்.

"ஸார்...! சம்பவத்தை நேர்ல ஒருத்தர் பார்த்திருக்கார். உங்க மகன் ராஜவேலு தன்னோட பைக்கை அவிநாசி ரோடு லட்சுமி மில் சிக்னல் பக்கத்தில் ரோட்டோரமாய் நிறுத்திட்டு யார் கூடவோ செல்போன்ல பேசிட்டு இருந்துருக்கார். அந்த சமயத்துல பைக்குல ரெண்டு பேர் வேகமா வந்துருக்காங்க. பைக்குக்குப் பின்னாடி உட்கார்ந்துட்டு இருந்தவன் கண் இமைக்கிற நேரத்துல தன்னோட கையில்



வெச்சிருந்த ஸ்பிரேயரை எடுத்து ராஜவேலு முகத்துல ஏதோ புகை மாதிரி ஸ்ப்ரே பண்ணியிருக்கான். ராஜவேலு நிலை தடுமாறிப் போய் கீழே விழுந்திருக்கார். விழுந்தவராலே உடனடியாய் எந்திரிச்சு நிக்க முடியலை. இந்த சம்பவத்தை எதிரில் பஸ்ஸுக்காக வெயிட் பண்ணிட்டிருந்த ஒருத்தர் பார்த்துட்டு பதறிப் போய் ஓடி வந்து என்ன ஏதுன்னு பார்க்கிறதுக்குள்ளே அந்த பைக்காரங்க மின்னல் வேகத்துல பறந்துட்டாங்க. சம்பவத்தை நேர்ல பார்த்தவர் சத்தம் போடவும் அக்கம்பக்கத்தில் இருந்தவங்க வந்து ராஜவேலுவுக்கு முதல் உதவி பண்ணியிருக்காங்க. அப்படியும் மயக்கம் தெளியாததால ஜி.ஹெச்சுக்கு கொண்டுவந்து இருக்காங்க. ஆனா வர்ற வழியிலேயே ராஜவேலு இறந்துட்டார்."

பார்மலின் நெடியோடு ஏ.சி.யின் ஜில்லிப்பில் உறைந்துபோயிருந்த மார்ச்சுவரியின் அறைக்குள் எரிமலையாய் கொந்தளிக்கும் இதயங்களோடு உள்ளே நுழைந்தார்கள் பைரவமூர்த்தியும் வஜ்ரவேலுவும்.

மார்ச்சுவரியின் தகர மேஜையின் மேல் நல்ல ஆகிருதியோடு மல்லாந்து சலனமில்லாமல் தெரிந்தான் ராஜவேலு. கண்கள் பாதி செருகி லேசாய் வாய் பிளந்து, பல்வரிசை கிட்டித்துப் போய் உயிரை விட்டிருந்தான்.

இரண்டு அனல் துண்டுகளாய் மாறியிருந்த விழிகளால் தம்பி ராஜவேலுவின் சடலத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த வஜ்ரவேலு இருங்கோவேளிடம் திரும்பினான்.

"ஏ.சி.பி. ஸார்...! சம்பவத்தை நேர்ல பார்த்த ஆள் யார்ன்னு சொன்னீங்க...?"



"பேரு ரமணன்... ஒரு தனியார் கம்பெனியில் வேலை பார்த்துட்டு இருக்கார். காந்திபுரம் போறதுக்காக பஸ்ஸுக்கு வெயிட் பண்ணிட்டிருந்தவர் அந்த ஸ்பிரேயிங் சம்பவத்தைப் பார்த்து இருக்கார். பக்கத்து ரூம்ல தான் இருக்கார். சம்பவத்தை அவர் மட்டுமே நேர்ல பார்த்து இருக்கிறதால அவர்கிட்டே

இன்னமும் என்கொயர் பண்ண வேண்டியிருக்கு...!"

"நான் அவரைப் பார்க்கணும் ஏ.சி.பி. ஸார்."

"வாங்க..."

மூன்று பேரும் வெளியே வந்து வெறுமனே சாத்தப்பட்டிருந்த பக்கத்து அறைக்குள் நுழைந் தார்கள். ஜன்னல் அருகே போடப்பட்டிருந்த ஒரு



நாற்காலியில் தலைகுனிந்தபடி உட்கார்ந்திருந்த அந்த நடுத்தர வயது நபர் ஏ.சி.பி.யைப் பார்த்ததும் கோபத்தோடு எழுந்தார்.

"ஸார்! இது உங்களுக்கே நியாயமாய் படுதா...? நான் அந்த சம்பவத்தைப் பார்த்தேன்ங்கிற காரணத்துக்காக ஜி.ஹெச். வரைக்கும் கூட்டிட்டு வந்து ஏதோ ஒரு கொலைக் குற்றவாளிகிட்டே விசாரணை பண்ற மாதிரி ஆள் மாற்றி ஆள் விசாரணை பண்ணிட்டு இருக்கீங்க...? என்னை எப்பத்தான் வெளியே அனுப்பறதாய் உத்தேசம்...?"

பைரவமூர்த்தி நீர் நிரம்பிய கண்களோடு ரமணனை நெருங்கி அவருடைய தோள் மீது கையை வைத்தார்.

"சம்பவத்தைப் பார்த்த ஒரே ஐ விட்னஸ் நீங்கதான். இன்னிக்குக் காலையில் இருந்தே எங்க வீட்ல நடக்கற சம்பவங்கள் ஒவ்வொண்ணும் அதிர்ச்சிக்கு மேல அதிர்ச்சியைக் கொடுத்துட்டு இருக்கு. எம் பொண்ணு பூமொழி தான் காதலிச்ச ஒரு பையனோடு வீட்டை விட்டு ஓடிட்டா. அவளைத் தேடிக்கிட்டுப் போன ராஜவேலு உயிரோடு இல்லை. என்னோட ரெண்டு பசங்களும் என்னோட ரெண்டு கைகள். அதுல ஒரு கையை நான் இழந்துட்டேன். நீங்க போலீஸுக்கு கொஞ்சம் கூடுதலான ஒத்துழைப்பைக் கொடுத்தா அந்தக்

**அவளைத் தேடிக்கிட்டுப் போன ராஜவேலு உயிரோடு இல்லை!**

கொலையாளிகள் யார்ங்கிறதை அவங்க கண்டுபிடிச்சுடுவாங்க...!”

ரமணன் வெப்பமான பெருமூச்சொன்றை வெளியிட்டு விட்டு சலிப்பான குரலில் சொன்னார்.

“ஸார்! நான் ஏ.சி.பி. கிட்டே பத்து தடவை சொன்னதை இப்போ பதினோராவது தடவையாய் உங்க கிட்டே சொல்லப் போறேன். நான் அவிநாசி ரோடு சிக்னல் பக்கத்துல இருக்கிற பஸ் ஸ்டாப்பில் காந்திபுரம் போற பஸ்ஸுக்காக வெயிட் பண்ணிட்டிருந்தபோது ரோட்டுக்கு எதிர் சைடில் உங்க சன் தன்னோட பைக்குக்குப் பக்கத்துல நின்னுகிட்டு செல்போன்ல யார் கூடவோ சத்தமாய் பேசிட்டு இருந்தார். அவர் சத்தமாய் பேசினதினால்தான் என்னோட கவனம் அவர் மேல விழுந்தது. ஏன் இப்படி சத்தமாய் கோபமாய் பேசிட்டிருக்கார்ன்னு நான் யோசனை பண்ணிட்டு இருக்கும்போதே ஒரு பைக் வேகமாய் வந்து அவர் பக்கத்துல நின்னது. ஒரு விநாடிக்குக் குறைவான நேரத்துல பைக்குக்குப் பின்னாடி உட்கார்ந்துட்டிருக்கிற நபர் தன்கையில் வெச்சிருந்த ஸ்பிரேயர் மூலமா எதையோ ஸ்பிரே பண்ணினான். அது காத்துல புகை மாதிரி பரவிகிட்டு இருக்கும்போதே உங்க சன் மயங்கி விழுந்துட்டார். நான் ஓடிப்போய்ப் பார்த்து சத்தம் போட்ட பின்னாடிதான் அக்கம்பக்கத்தில் இருந்தவங்க நிலைமையை புரிஞ்சுகிட்டு ஓடி வந்தாங்க.”

**கேமராவில் ராஜவேலு மார்டர் சம்பந்தப்பட்ட நிகழ்வு நல்ல முறையில் பதிவாகியிருக்கு ஸார்!**



வஜ்ரவேல் ரமணனின் இடது தோள் மீது கையை வைத்து கோபமாய் திருப்பினான்.

“அந்த ரெண்டு பேரையும் மறுபடியும் பார்த்தா உங்களால அடையாளம் கண்டுபிடிக்க

முடியுமா?"

"முடியாது ஸார்... ரெண்டு பேருமே ஹெல்மெட் போட்டிருந் தாங்க. ஜெர்கின் கோட் வேற. முகத்தை சரியாய் பார்க்க முடியாத படிக்கு கர்ச்சீப்பால கட்டியிருந் தாங்க. எல்லாமே ஒரு விநாடி நேரத்துக்குள்ளே நடந்துட்டதாலே எதையுமே சரியா அப்ஸர்வ் பண்ண முடியலை ஸார்."

ரமணன் சொல்லிக்கொண்டு



இருக்கும்போதே அறை வாசலில் அந்த இன்ஸ்பெக்டர் வந்து நின்றார்.

"எக்ஸ்க்யூஸ் மீ ஸார்."

"வாங்க அசோகன்..."

அசோகன் கையில் ஒரு ப்ரவுன் கவரோடு உள்ளே வந்தார்.

"ஸார்! ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டியிருக்கு."

இருங்கோவேள் ரமணனிடம் திரும்பினார். "நீங்க கொஞ்சநேரம் வெளியே போய் இருங்க."

"என்னைக் கொஞ்சம் சீக்கிரமாய் அனுப்பி வையுங்க ஸார். நான் ஆபீஸுக்குப் போகணும்!"

"ஒரு மணி நேரத்துக்குள்ளே போயிடலாம்... வெயிட் பண்ணுங்க... ரமணன்!"

ரமணன் வெளியே போனதும் இன்ஸ்பெக்டரிடம் திரும்பினார் இருங்கோவேள்.

"சொல்லுங்க அசோகன்!"

"ஸார்... அவிநாசிரோடு சிக்னல் அருகே பொருத்தப்பட்டிருந்த சி.சி.டி.வி. கேமராவில் ராஜவேலு மர்டர் சம்பந்தப்பட்ட நிகழ்வு நல்ல முறையில் பதிவாகியிருக்கு ஸார். இந்தப் போட்டோக்களைப் பாருங்க ஸார்." அசோகன் தன்னிடம் இருந்த கவரை நீட்ட இருங்கோவேள் போட்டோக்களை உருவி ஒவ்வொன்றாய் பார்த்தார்.

ரமணன் சொன்னது போலவே ராஜவேலு சாலையோரமாய் பைக்கை நிறுத்திவிட்டு செல்போனில் பேசிக் கொண்டு இருப்பதும், ஒரு பைக்கில் இருவர் வருவதும், ஸ்பிரேயரை உபயோகிப்பதும், ராஜவேலு கீழே சரிவதும், ரமணன் ஓடிவந்து அவரைத் தூக்குவதும் என்று

போட்டோக்களில் பதிவுகள் தெரிய, அசோகன் மெல்ல குரல் கொடுத்தார்.

"ஸார்...! அந்த மூணாவது போட்டோவைப் பாருங்க."

பார்த்தார்.

பைக்கில் வந்த இருவரும் ராஜவேலுவுக்குப் பக்கத்தில் நின்றிருக்க பைக்கின் பின்னால் உட்கார்ந்திருந்த நபர் தன்னுடைய இடது கையை நீட்டி ஸ்பிரேயரை அழுத்திக் கொண்டு இருப்பது தெரிந்தது. இருங்கோவேள் குழப்பமாய் அசோகனைப் பார்த்தார்.

"இந்தப் போட்டோவில் என்ன இருக்கு?"

"ஸ்பிரேயரை கையில் வெச்சிட்டிருக்கிறது ஒரு ஆண் கிடையாது ஸார். பெண்."

"பெண்ணா?"

"ஆமா... ஸார்...!"

"எப்படி சொல்றீங்க?"

"ஹெல்மெட்டோட இடது பக்கம் காதோரமாய் பாருங்க ஸார். ஒரு சாண் நீளத்துக்கு வெள்ளையா தெரியுதே..?"

"ஆமா."

"அது மல்லிகைப் பூச்சரம் ஸார். ஒரு ஆண் போட வேண்டிய ஹெல்மெட்டை ஒரு பெண் போட்டிருக்கா. அதுதான் இவ்வளவு இடைவெளி. வீடியோவில் பார்த்த போது அந்தப் பூச்சரம் அசையறது நல்லாவே தெரிஞ்சுது ஸார். அதுவுமில்லாமே ஸ்பிரேயரைப் பிடிச்சிருக்கிற கையைப் பாருங்க ஸார். அது ஒரு ஆணோட கை மாதிரியே தெரியலை. நீள நீளமாய் விரல்கள். பெருவிரல் நகத்துல லேசாய் நெயில்பாலீஷ் பூச்சு தெரியுது ஸார்..."

அந்தப் போட்டோவை உற்றுப் பார்த்த இருங்கோவேள் "யூ... மே... பி... கரெக்ட்!" என்று சொல்லிவிட்டு பைரவமூர்த்தியிடம் திரும்பினார்.

"ராஜவேலு கொலையான விஷயத்தில் ஒரு பெண் சம்பந்தப் பட்டிருக்கா. அவ யாராய் இருக்கும்ன்னு நினைக்கறீங்க?"

போட்டோவை வாங்கிப் பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சோடும் கண்கள் நிறைய நீரோடும் தலையாட்டினார் பைரவ மூர்த்தி.



"தெரியலையே!"

வஜ்ரவேல் மட்டும் கோபத்தில் பொரிந்தான். "ஸார்! இது நிச்சயமாய் அந்த சர்வேஷோட வேலைதான்!"

"சர்வேஷ்ன்னு நீங்க சொல்றது உங்க சிஸ்டர் பூமொழியோட காதலன்தானே?"

"ஆமா... ஸார்."

“அப்படீன்னா பாய்ஸன் ஸ்பிரேயரை ராஜவேலு மேல் பிரயோகம் பண்ணினது பூமொழியாய் இருக்கும்ன்னு சொல்ல வர்றீங்களா?”

“அந்தப் பெண் பூமொழியாய் இருக்க முடியாது ஸார்.”

“அப்படீன்னா அந்தப் பொண்ணு யாரு?”

“ஸார்! சர்வேஷைப் பத்தி நான் கேள்விப்பட்ட வரையில் அவன் அவ்வளவு நல்லவன் கிடையாது. பல பெண்களோடு அவனுக்குத் தொடர்பு இருக்கு. என்னையும் அப்பாவையும் பயமுறுத்தறதுக்காக அவன் ராஜவேலுவைத் தீர்த்துக் கட்டியிருக்கணும்...”

**ராஜவேலு கொலையான விஷயத்தில் ஒரு பெண் சம்பந்தப்பட்டிருக்கா!**

பைரவமூர்த்தி கையமர்த்தினார்.

“அப்படியிருக்க வாய்ப்பில்லை வஜ்ரவேல். நமக்கு ஆரம்ப நாட்களில்



இருந்தே பங்காளிகளைக் காட்டிலும் பகையாளிகள்தான் அதிகம். பூமொழி வீட்டை விட்டு ஓடிப்போன விஷயம் யாரோ ஒரு பகையாளியோட காதுக்குப் போயிருக்கணும். பழி பூமொழி மேலேயும், அந்தப் பையன் சர்வேஷ் மேலேயும் வரணும்ங்கிறதுக்காக நம்ம ராஜவேலுவை சரியான சமயம் பார்த்து தீர்த்துக் கட்டியிருக்காங்க... அந்தப் பகையாளி யாராய் இருக்கக் கூடும்கிறதையும் நான் ஓரளவு கெஸ் பண்ணிட்டேன்.”

இருங்கோவேள் லேசாய் பதட்டப்பட்டார். “அது யாராய் இருந்தாலும் பரவாயில்லை சொல்லுங்க ஸார். இந்த நிமிஷமே போய் சந்தேகத்தை அடிப்படையாய் வெச்சு அரஸ்ட் பண்ணி கொண்டு வந்து விசாரிச்சுடலாம்.”

“ராஜவேலுவை கொலை செய்யறதுக்காக எது மாதிரியான பாய்ஸனை உபயோகப்படுத்தியிருக்

காங்கிற விவரம் தெரிஞ்சாத்தான் அது அந்த நபர்தானா இல்லையாங்கிறதை நான் உறுதி பண்ண முடியும்...”

“அந்த விவரம் எல்லாம் ராஜவேலுவோட போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் கைக்கு வந்த பின்னாடிதான் தெரியும்.”

பைரவமூர்த்தி ஏதோ சொல்ல முயன்ற விநாடி அவருடைய செல்போன் ரிங்டோனை வெளியிட்டது. எடுத்து டிஸ்ப்ளேயில் எண் பார்த்தார்.

புது எண்.

ஹேண்ட் செட்டை காதுக்கு ஏற்றி மெல்ல குரல் கொடுத்தார்.

“யாரது?”

“அப்பா! நான்தான் பூமொழி....”

பதட்டமானார் பைரவமூர்த்தி. “ஏய்... ஓடுகாலி! இப்ப நீ எங்கே இருக்கே...?”

மறுமுனையில் பூமொழி சிரித்தாள்.

“என்னோட பேர் ஓடுகாலி இல்லப்பா. பூமொழி. நீங்க வெச்ச பேர்தான். அதுசரி... சின்ன அண்ணன் ராஜவேலுவோட போஸ்ட் மார்ட்டம் முடிஞ்சதா... இன்னும் இல்லையா...?”

“ஏய்... நீ... நீ...?”

“நீங்க நினைக்கிறது சரிதான்... பெரிய அண்ணன் வஜ்ரவேலுவைக் காட்டிலும் சின்ன அண்ணன் ராஜவேலுவுக்குத்தான் ரோஷம், மானம், சுயமரியாதை, கௌரவம் இதெல்லாம் கொஞ்சம் கூடுதல். நம்ம வீட்லயே கடிக்கிற பாம்பு எதுன்னா சின்ன அண்ணன்தான். அது எங்களைக் கடிக்கிறதுக்கு முன்னாடி அடிச்சுக் கொன்னுட்டோம்...



உங்களுக்கும் பெரிய அண்ணனுக்கும் அந்த நிலைமை வரக்கூடாதுன்னு நினைச்சா நாங்க போற வழியில குறுக்கே நிக்காமே தள்ளி நில்லுங்க. மீறி குறுக்கே நின்னா சின்ன அண்ணனோட கதிதான் உங்களுக்கும்...! ஏன்னா என்னோட காதல் ஜெயிக்கணும்... நாங்க ரெண்டு பேரும் ஜெயிலுக்குப் போனாலும் பரவாயில்லை...!”

பைரவமூர்த்தி வியர்த்து வழிந்துகொண்டு என்ன பேசுவது என்று தெரியாமல் திணறிக் கொண்டிருக்கும்போதே மறுமுனையில் செல்போனின் இணைப்பைத் துண்டித்தாள் பூமொழி.

**(தொடரும்)**

https://t.me/digital_tamil



# ஒரு லட்சம் விநாடிகள்

**செல்போனை அணைக்கக்கூட தோன்றாமல் கிட்டத்தட்ட ஒரு சிலையைப் போலவே நின்றிருந்த பைரவமூர்த்தியின் தோளைத் தொட்டான் வஜ்ரவேல்.**

"போன்ல யாருப்பா... பூமொழியா...?" கோபச் சிவப்பு ஏறிய முகத்தோடு வஜ்ரவேலை ஏறிட்ட பைரவமூர்த்தி வார்த்தைகளை அமிலத்தில் தோய்த்து வீசினார்.

"அவளை இன்னொரு தடவை 'பூமொழி'ன்னு பேர் சொல்லிக் கூப்பிடாதே... ஓடு காலின்னு சொல்லு. அவளுக்கு அவளோட

காதல்தான் பெரிசாம். அவளோட காதலுக்கு குறுக்கே யாரும் நிக்கக்கூடாதாம். உன்னோட தம்பி ராஜவேலு கடிக்கிற பாம்பாம். அதனால்தான் தீர்த்துக் கட்டிட்டாளாம். இனிமே யார் குறுக்கே நின்னாலும் ராஜவேலுவுக்கு ஏற்பட்ட கதிதான் ஏற்படுமாம்...”

“என்னால நம்ப முடியலைப்பா... பேசினது அவதானா... இல்லை அவளைப் போலவே யாராவது பேசி இருப்பாங்களா?”

“பேசினது அவதாண்டா... அவ குரல் எப்படியிருக்கும்னு எனக்குத் தெரியாதா... என்ன...? அவ தன்னோட காதலில் ஜெயிக்கணுமாம். அதுக்காக அவ எந்த லெவலுக்கும் போவாளாம். ஜெயிலுக்குப் போறதைப்பத்திகூட அவளுக்குக் கவலை இல்லையாம்...!”

“அப்பா! உங்க செல்போனை ஒரு நிமிஷம் என்கிட்டே குடுங்க... அவ போன் பண்ணின நம்பர்க்கு நான் பேசிப் பார்க்கிறேன்” சொன்ன வஜ்ரவேல் பைரவமூர்த்தியின் கையில் இருந்த போனை பறிக்காத குறையாய் வாங்கிக்கொண்டு செல்போன் ‘லாக்ஸ்’ ஆப்ஷனுக்குப் போய் அந்த எண்ணைத் தேய்த்தான். அடுத்த விநாடியே ரிக்கார்டட் வாய்ஸ் கேட்டது.

‘இந்த எண் இப்போது உபயோகத்தில் இல்லை.’

மேலும் இரண்டு தடவை முயற்சி செய்து பார்த்துவிட்டு

4 6 வார அதிரடித் தொடர்



ராஜேஷ்குமார்



எரிச்சலாய் அப்பாவிடம் செல்போனைக் கொடுத்தான் வஜ்ரவேல்.

“சிம்கார்டை மாத்திட்டா போலிருக்கு!” சொன்னவன் அஸிஸ்டண்ட் கமிஷ்னர் இருங்கோவேளிடம் திரும்பினான்.

“ஸார்... என்னோட சிஸ்டர் பூமொழி அப்பாவுக்கு போன் பண்ணி ராஜவேலுவை தான்தான் கொலை செய்ததாய் சொல்லி யிருக்கா. அப்படி அவ பண்ணி இருக்க வாய்ப்பில்லை. சொந்த அண்ணனையே கொலை பண்ணக்கூடிய அளவுக்கு அவளுக்கு இரக்கமில்லா இதயம் கிடையாது ஸார்...”

“உங்க அப்பாவுக்கு போன் பண்ணிப் பேசினது பூமொழி இல்லைன்னு சொல்ல வர்றீங்களா?”

“ஆமா... ஸார்...?”

“அது பூமொழியோட குரல்தான்னு உங்க அப்பா சொல்றாரே? தன் பொண்ணோட வாய்ஸ் எப்படியிருக்கும்ன்னு ஒரு அப்பாவுக்குத் தெரியாதா என்ன?”

“அதான் ஸார் எனக்கும் குழப்பமாய் இருக்கு!” வஜ்ரவேல் சொல்ல கோபாவேசமாய் அவனிடம் திரும்பினார், பைரவமூர்த்தி.

“எனக்கு எந்தக் குழப்பமும் இல்லடா... போன்ல பேசினது சர்வ நிச்சயமாய் அவதான். அவ பேசற ஒவ்வொரு வார்த்தையும் எப்படி யிருக்கும்ன்னு எனக்குத் தெரியும். கடந்த ஒரு மாசமாவே அவளோட நடவடிக்கைகள் சரியில்லை. வீட்ல இருக்கும்போது அடிக்கடி மொட்டை மாடிக்குப் போய் போன் பேசிட்டு வர்றா. அதுவும் ஒரு மணி நேரத்துக்கு குறையாமே. ராத்திரி நேரங்கள்ல அவ சரியாத் தூங்கறதேயில்லை. ஒரு தடவை போர்வை போர்த்திக்கிட்டே உள்ளேயிருந்தபடி போன் பேசிட்டிருந்தா. நான் அப்பவே அவளைக் கண்டிக்கிற விதமாய் என்ன ஏதுன்னு கேட்டு இருக்கணும். அப்படி கேட்காமே விட்டது தப்புன்னு இப்பத்தான் தெரியுது...” பைரவமூர்த்தி ஆவேசம் கொப்பளிக்க கண்களில் நீர் சிதற சொல்லிக் கொண்டு

இருக்கும்போதே அந்த ட்யூட்டி டாக்டர் அறை வாசலில் வந்து தயக்கமாய் நின்று குரல் கொடுத்தார்.

"எக்ஸ்க்யூஸ் மீ ஸார்"...

இருங்கோவேள் திரும்பினார்.

"எஸ்..."

"சீஃப் டாக்டர் உங்ககிட்டே பேசணும்ன்னு சொன்னார் ஸார். ராஜவேலுவோட எக்ஸ்டர்னல் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்ல அவரோட மரணத்துக்கான காரணம் வெளிப்பட்டிருக்கு. அது சம்பந்தமாய் அவரோட ஃபேமிலி மெம்பர்ஸ்கிட்டேயும் பேசணும்ன்னு விருப்பப்படறார்."

சீஃப் டாக்டர் ஸ்ரீவத்சன் தனக்கு முன்பாய் உட்கார்ந்திருந்த அஸிஸ்டண்ட் கமிஷனர் இருங்கோவேள், இன்ஸ்பெக்டர் அசோகன், பைரவமூர்த்தி, வஜ்ரவேல் நான்கு பேரையும் ஒரு பொதுவான பார்வை பார்த்துக் கொண்டு பேசினார். அவருடைய முகம் ஒருவகையான இறுக்கத்துக்கு உட்பட்டு இருந்தது.

"ராஜவேலுவோட மரணத்துக்குக் காரணம் ஒரு வகையான விஷப் புகைதான். இது மாதிரியான பாய்ஸன் கேஸ் பெரும்பாலும் இந்தியாவில் இல்லை. வெளிநாடுகளில் சில தீவிரவாத அமைப்புகள் தங்களோட எதிரிகளை அழிக்கிறதுக்காக பயன்படுத்துவது வழக்கம். இந்த விஷத்துக்குப் பேரு மஸ்டர்ட் கேஸ். அது ஸ்ப்ரேயரில் அடைபட்டு இருக்கும்போது திரவமாய் இருக்கும். ஸ்ப்ரேயரிலிருந்து வெளிப்படும்போது புகையாய் வரும். அந்தப் புகை வெளிர் மஞ்சள் நிறத்துல இருக்கும். இந்த வாயுவை சுவாசிக்கிற ஒரு நபர் பத்து விநாடிகளுக்குள்ளே நிலை குலைஞ்சு கீழே சாய்ஞ்சுடுவார். அதற்குப் பிறகு நுரையீரல்களில் உள்ள காற்று அறைகளுக்குள்ளே இந்த வாயு எட்டிப் பார்த்ததுமே




"2016-ல்..."

"தலைவரே... காலண்டர், டைரி வந்தா கொடுங்க...?"

-வி. சாரதி டேச்சு, சென்னை-5.

ஒருத்தனோட மரணம் நிச்சயமாயிடும். இப்படியாக கொடிய பாய்ஸன் ஒருத்தரோட கைக்கு கிடைச்சிருக்குன்னா அந்த நபர் சாதாரண நபராய் இருக்க முடியாது.”

இருங்கோவேள் குறுக்கிட்டார். “டாக்டர்! யூ மீன்... இது ஒரு தீவிரவாதிகள் சம்பந்தப்பட்ட விவகாரம்ன்னு சொல்ல வர்றீங்களா?”

“மே... பி...”

“அப்படியிருக்க வாய்ப்பில்லை டாக்டர். மிஸ்டர் பைரவமூர்த்தியும் சரி, அவரோட ஃபேமிலியும் சரி ஹைலி ரெஸ்பெக்டட் ஃபேமிலி... இன்னிக்கு காலையிலவிருந்து இவங்க வீட்ல ஒரு பிரச்னை. டாட்டர் பூமொழி சர்வேஷ்ங்கிற ஒரு பையனை லவ் பண்ணிருக்கா. வீட்ல கண்டிப்பாய் சம்மதிக்கமாட்டாங்கன்னு நினைச்சு ஒரு லெட்டரை எழுதி வெச்சுட்டு வீட்டை விட்டுப் போயிட்டா. அவளைத் தேடிக்கிட்டுப் போன ராஜவேலுவைத்தான் யாரோ ஃபாலோ பண்ணி சமயம் பார்த்து பாய்ஸன் ஸ்பிரேயரை உபயோகப்படுத்தி அவரைக் கொலை பண்ணியிருக்காங்க. இதுல இருக்கற ஒரு பெரிய குழப்பம் என்னன்னா கொஞ்ச நேரத்துக்கு முந்தி பூமொழி தன்னோட அப்பா பைரவமூர்த்திக்கு போன் பண்ணி சின்ன அண்ணன் ராஜவேலுவை நான்தான் கொலை பண்ணினேன். என்னோட காதலுக்கு குறுக்கே யார் வந்தாலும் சரி ராஜவேலு மாதிரி உயிரைவிட வேண்டியதுதான்னு சொல்லியிருக்கா...?”

டாக்டர் ஸ்ரீவத்சன் மெலிதாய் புன்னகைத்தார்.

“கொலை பண்ணினவங்க யாரும் இப்படி வலிய போன் பண்ணி தன்னிலை விளக்கம் கொடுக்க மாட்டாங்களே...?”

## பௌர்ணமி நாட்களின் இரவுகளில் அவளுடைய ஆர்ப்பாட்டம் அதிகமாய் இருக்கும்!

பைரவமூர்த்தி குறுக்கிட்டார். "டாக்டர்...! நீங்க இப்படி சொன்னதால நானும் இப்போ ஒரு உண்மையை உங்ககிட்டே சொல்ல வேண்டியிருக்கு. என்னோட டாட்டர் பூமொழி கடந்த ஆறுமாதங்களாகவே நார்மலான மனநிலையில் இல்லை. ஸ்பிலிட் பர்சனால்டின்னு சொல்லப்படுகிற ஒரு மெண்ட்டல் டிஸ்ஆர்டர் நோயால் பாதிக்கப்பட்டு இருந்தா... அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களின் இரவுகளில் அவளுடைய ஆர்ப்பாட்டம் அதிகமாய் இருக்கும். அது மாதிரியான நேரங்களில் அவளுக்கு ஒரு பெத்தடின் ஊசியைப் போட்டு தூங்க வெச்சுடுவேன்... இந்த விஷயம் என்னோட மகன்களுக்குத் தெரியாது."

"நீங்க உங்க டாட்டரை ஏதாவது ஒரு சைக்யாட்ரிஸ்ட்கிட்டே கூட்டிட்டுப் போயிருக்கலாமே...?"

"அப்படி கூப்ட்டுட்டுப்போனா விஷயம் வெளியே தெரிஞ்சுடுமே என்கிற ஒரு நெருடல் இருந்தது."

"உங்க டாட்டர் பூமொழி சர்வேஷ்ங்கிற ஒரு பையனை லவ் பண்ற விஷயம் உங்களுக்குத் தெரியாதா?"

வஜ்ரவேலு பைரவமூர்த்தியை ஒரு கோபப் பார்வை பார்த்தான். "அப்பா...! நானும் ராஜவேலுவும் அதே வீட்லதான் இருக்கோம். எங்ககிட்டே பூமொழிக்கு இந்த பிராப்ளம் இருக்குன்னு சொல்லி யிருக்கலாமே?"

"உங்க ரெண்டு பேர்கிட்டே சொல்றதும் ஒண்ணுதான் ஒட்டுமொத்த ஊரையும் கூட்டி வெச்சு சொல்றதும் ஒண்ணுதான். எப்படியாவது அவளை நானே குணப்படுத்திடலாம்ன்னு பார்த்தேன். மும்பையில் எனக்குத் தெரிஞ்ச ஒரு சைக்யாட்ரிஸ்ட் டாக்டர் ஒருத்தர்



இருக்கார். பேரு துவாரகாநாத். இந்த மாசக் கடைசியில் உங்க ரெண்டு பேர்கிட்டேயும் ஏதாவது ஒரு காரணம் சொல்லிட்டு பூமொழியை மும்பைக்கு

கூட்டிட்டுப் போய் அவர்கிட்டே காட்டலாம்ன்னு இருந்தேன். ஆனா அவளுக்கு ஒரு காதல் இருக்கும்; அந்தக் காதல் வீட்டை விட்டு ஓடிப்போகிற அளவுக்கு தீவிரமாய் இருக்கும்ன்னு நான் நினைச்சுக்கூடப் பார்க்கலை."

வஜ்ரவேலுவின் முகத்தில் இப்போது பீதி தெரிந்தது.

"அப்படீன்னா பூமொழி டெலிபோன்ல அவ்வளவு ஹார்ஷா பேசறதுக்குக் காரணம் அவளுக்குள் இருக்கிற மனச்சிதைவு நோய்தான் காரணமா?"

"அதேதான்... அவ எந்த நேரத்துல இயல்பாய் இருப்பா... எந்த நேரத்துல அரகண்டா மாறுவாள்னு அவளுக்கே தெரியாது. ராஜவேலுவை பாய்ஸன் ஸ்பிரேயர் மூலமா கொலை பண்ணினது நிச்சயமா பூமொழியாத்தான் இருக்க முடியும். நான் இவ்வளவு உறுதியாச் சொல்றதுக்கு காரணமும் இருக்கு."

"என்ன காரணம்?"

"பூமொழி ஒரு பயோடெக் பட்டதாரின்னு உனக்குத் தெரியும். போன மாசத்துல ஒருநாள் நானும் அவளும் சோபாவில் பக்கம் பக்கமாய் உட்கார்ந்திட்டிருந்தோம். நான் பேப்பர் படிச்சிட்டிருந்தேன். அவ தன்னோட ஸ்மார்ட் போன்ல மும்முரமா எதையோ பார்த்துட்டிருந்தா. அந்த சமயத்துல லேண்ட் லைன்ல ஒரு போன் வரவும் பூமொழி தன்னோட செல்போனை சோபாவிலேயே வெச்சுட்டு எந்திரிச்சுப் போனா. போன்ல யாரோ ஒரு ஃப்ரெண்ட் பேசவும் அதுல ஐக்கியமாயிட்டா. போன்ல அப்படி என்னத்தைப் பார்த்துட்டிருந்தா என்கிற ஆர்வம் என் மனசுக்குள்ளே தலைதூக்கவும் அந்த போனை எடுத்துப் பார்த்தேன். அப்படியே அதிர்ந்து போயிட்டேன். அவ




**''தலைவர் ஏன் உம்முனு இருக்காரு...?''**

**''நடைப் பயணத்தில அவரை வரவேற்க 'நையாண்டி மேளம்' அடிச்சாங்களாம்...!''**

- கா. பசும்பொன்,
மதுரை_18.

பார்த்துட்டிருந்த வெப்சைட் எது தெரியுமா?"

எது என்கிற மாதிரி எல்லோரும் அவரையே பார்க்க அவர் சொன்னார்... "டேஞ் சரஸ் பாய்ஸன் - டாப் டென். டெட்லியஸ்ட் பாய்ஸன்ஸ் யூஸ்டு பை மேன். (Dangerous poison -Top 10. Deadliest poisons used by man)"

வஜ்ரவேல் லேசாய் நெற்றி வியர்த்து பயக்குரலில் கேட்டான். "நீங்க அதைப்பத்தி அவகிட்டே எதுவும் கேட்கலையா?"

"கேட்கலாம்ன்னு இருந்தேன். அதுக்குள்ளே என்னைத் தேடி நண்பர் ஒருத்தர் வந்துட்டதால அதுக்கப்புறம் அந்த விஷயத்தையே மறந்துட்டேன்!"

"என்னப்பா இது...? பூமொழி சம்பந்தமா வீட்ல எவ்வளவோ விஷயங்கள் நடந்துருக்கு. அதை என்கிட்டேயும் ராஜவேலுகிட்டேயும் சொல்லி என்ன செய்யலாம்ன்னு கேட்டுருக்க வேண்டாமா?"

பைரவமூர்த்தி கண்களில் நீரோடு தலைகுனிந்தபடி உட்கார்ந்திருக்க அஸிஸ்டண்ட் கமிஷனர் இருங்கோவேள் இன்ஸ்பெக்டர் அசோகனிடம் திரும்பினார்.

"அந்த பூமொழியையும் சர்வேஷையும் உடனடியாய் மடக்கியாகணும். நான் கமிஷனர்கிட்டே பேசி ஒரு சர்ச் ஸ்க்வாடை ஃபார்ம் பண்ணணும். நீங்க அந்த சர்வேஷ யார்ன்னு விசாரிங்க."

"எஸ்... ஸார்..." இன்ஸ்பெக்டர் அசோகன் தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே பைரவமூர்த்தியின் செல்போன் ரிங்டோனை வெளியிட்டது. செல்போனை பவ்யமாய் எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

அம்பாள் அடிமை ஜோதிடர்.

**கொலை பண்ணினது நிச்சயமாய் பூமொழியாய்த்தான் இருக்க முடியும்!**






**இளமை, புதுமை**
**எதிலும் முதன்மை**

நிறுவிய ஆசிரியர்
**எஸ்.ஏ.பி.**

நிறுவிய பதிப்பாளர்
**பி.வி. பார்த்தசாரதி**

சேர்மன் மற்றும் நிர்வாக இயக்குநர்
**பா. வரதராசன்**

அச்சிட்டு வெளியிடுபவர்
**பா. வரதராசன்**

ஆசிரியர்
க. ராமச்சந்திரன்
(ப்ரியா கல்யாணராமன்)

பொறுப்பாசிரியர்கள்
இரா. மணிகண்டன்
இளையரவி

துணைத் தலைமை நிருபர்
அன்வர்

உதவி ஆசிரியர்
கடற்கரய்

நிருபர் குழு
வீரகேரளம் சரவணன், சிந்துகுமார்,
அரண்மனை சுப்பு, அரவிந்த்,
ம. அய்யனார் ராஜன்.

புகைப்படக் கலைஞர்கள்
சித்ராமணி, ஆர். சண்முகம்

**குமுதம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட், பழைய எண்.151 புதிய எண்.306, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10ல் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.**



கதை, கட்டுரைகள் அனுப்ப வேண்டிய முகவரி :
தபால் பெட்டி எண் : 2592, சென்னை 600 031.
**தொலைபேசி எண் : 26422148**
**ஃபேக்ஸ் எண் : 26425041**
இ-மெயில் : edtl@kumudam.com

செல்போனை காதுக்கு ஒற்றி "சொல்லுங்க ஜோஸியரே!" என்றார் பைரவமூர்த்தி.

"பூமொழியைத் தேடிகிட்டுப்போன ராஜவேலு இறந்துட்டதா கேள்விப்பட்டேன். உண்மையா?"

"யார்... சொன்னாங்க?"

"வீட்டுக்கு போன் பண்ணினேன். வேலைக்காரன் மணி சொன்னான். மனசுக்கு கஷ்டமா இருந்தது. நான் காலையில் சொன்னது போல் உங்க குடும்பத்துக்கு நேரம் சரியில்லை. நான் கணக்குப் போட்டு சொன்னது போல் 27 மணி நேரம் 46 நிமிஷம் 40 விநாடி காலம்... அதாவது ஒரு லட்சம் விநாடிகள் மிக மிக மோசமான விபரீதமான விநாடிகள். என்னோட கணக்குப்படி இந்த விநாடியையும் சேர்த்து இருபதாயிரம் விநாடிகள் கழிந்து போனாலும் இன்னும் எண்பதாயிரம் விநாடிகள் உயிரோடு இருக்கு. எந்த விநாடியும் எது வேணும்ன்னாலும் நடக்கலாம். கொஞ்சம் முன்னெச்சரிக்கையோடு இருக்கிறது உத்தமம்."

"ஜோஸியரே... இதுக்கு ஏதாவது பரிகாரம் உண்டா?"

"இது பரிகாரத்துக்கு அப்பாற்பட்ட விஷயம்..." ●

**[தொடரும்]**

6 வார அதிரடித் தொடர்

https://t.me/digital_tamil

# ஒரு லட்சம் விநாடிகள்!

**செல்போனின் மறுமுனையில் அம்பாள் அடிமை ஜோதிடர் சொன்னதைக் கேட்டதும் பைரவ மூர்த்தி லேசாய் பதட்டப்பட்டார்.**

"என்ன ஜோஸியரே! இப்படி சொல்றீங்க...? நமக்கு வர்ற நோய் களைக் குணப்படுத்திக்க டாக்டர் கிட்டே போய் மருந்து வாங்கி சாப்பிடற மாதிரி நமக்கு ஏதாவது பிரச்னைகள் வந்தா அதைத் தீர்த்துக்க குறிப்பிட்ட கோயில்களுக்குப் போய் பரிகாரம் பண்ணினா அந்தப் பிரச்னைகள் காணாமே போயிடும்ன்னு நீங்களே என்கிட்ட எத்தனை தடவை சொல்லியிருக்கீங்க...!"

''சொன்னது வாஸ்தவம்தான்... ஆனா உங்க பொண்ணு பூமொழியோட ஜாதகத்துல 'நித்ய மாங்கல்ய பங்க தோஷம்' இருக்கு. இது மாதிரியான தோஷம் இருக்கிற குடும்பத்துல வாரிசுகள் உருவாவது ரொம்பவும் கஷ்டம். எந்த நேரத்துல எது மாதிரியான அசம்பாவிதம் வேண்டுமானாலும் நடக்கலாம். ராஜவேலு மரணமடைந்ததும் அந்த தோஷத்தோட கைங்கரியம்தான்."

"இதோ பாருங்க ஜோஸியரே! நீங்க என்னோட அப்பா காலத்திலிருந்து எங்க குடும்பத்துக்கு வரப்போகிற நல்லது கெட்டதுகளை எல்லாம் எடுத்துச் சொல்லி, சரியான பரிகாரங்களைப் பண்ணி பல்வேறு பிரச்னைகளிலிருந்து காப்பாத்தியிருக்கீங்க. இப்பவும் நான் உங்களைத்தான் நம்பியிருக்கேன்."

மறுமுனையில் அம்பாள் அடிமை ஜோதிடர் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு பிறகு நிறுத்தி நிதானமான குரலில் பேச ஆரம்பித்தார்.

"இந்த 'நித்ய மாங்கல்ய பங்க' தோஷம் தோஷங்களிலேயே மகாப் பெரிய தோஷம். இதை நிவர்த்தி பண்ண 'ஸ்வர்ண தாரணம்' என்கிற ஒரு பரிகாரம் இருக்கு. ஆனா அதைச் செய்து முடிக்க உங்களுக்கு அவகாசம் இருக்குமான்னு எனக்குத் தெரியலை. ஏன்னா நாளைக்குக் காலை 11 மணி 32 நிமிஷத்துக்குள்ளே இந்தப் பரிகாரத்தைப் பண்ணினால்தான் பலன். அதுக்கு மேலே ஒரு விநாடி அதிகமானாலும் பரிகாரத்தாலே பிரயோஜனம் இருக்காது!"

பைரவமூர்த்தி பதட்டம் தடவிய வார்த்தைகளோடு குறுக்கிட்டார்.

"அது என்ன பரிகாரம்ன்னு சொல்லுங்க ஜோஸியரே... அதுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் பண்ணிடுவோம்..."

"சரி... சொல்றேன். உங்களால முடியுதான்னு பாருங்க. நம்ம ஊர் ராஜவீதியில் ராமலிங்க சௌடேஸ்வரி அம்மன் கோயில் இருக்கிறது உங்களுக்குத் தெரியும். அது ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு கட்டப்பட்ட ஒரு பழமையான கோயில். அங்கே வீற்றிருக்கிற அம்மன் சக்தி வாய்ந்தவள். தன்னை நம்பி வந்தவர்களுக்கு சகல சௌபாக்கியங்களையும் தரக்கூடியவள். அதனால் அந்த அம்மனுக்கு சௌடேஸ்வரின்னு பேரு!"

‘‘சொல்லுங்க ஜோஸியரே... நானும் அந்தக் கோயிலைப் பத்தி கேள்விப் பட்டிருக்கேன். ஏதோ ஒரு பண்டிகை சமயத்துல அந்தக் கோயிலுக்கும் போயிருக்கேன்.”

“நாளைக்குக் காலை 11 மணி 32 நிமிஷத்துக்குள்ளே நீங்களும் வஜ்ரவேலுவும் மறுபடியும் கோயிலுக்குப் போகணும். போறதுன்னா வெறுமனே பூஜைத் தட்டோடு போகக் கூடாது.”

“பின்னே...?”

‘‘ஆயிரம் பொற்காசுகள் கோர்த்த ஒரு மாங்கல்யத்தோடு போகணும். ஒவ்வொரு பொற்காசும் ரெண்டு கிராம் அளவு எடையைக் கொண்டதாய் இருக்கணும். அந்த மாங்கல்யத்துக்குப் பெயர்தான் ஸ்வர்ண தாரணம். இதை அந்த அம்பாளுக்கு அணிவித்து கருவறையில் உட்கார்ந்து சௌடேஸ்வரி அம்மனைப் பற்றிய சஹஸ்ரநாமாவளி சொல்லணும்.”

“ஜோஸியரே! நாங்க இப்போ இருக்கிற நிலைமையில் இந்தப் பரிகாரத்தைச் செய்ய முடியுமா? இரண்டாயிரம் கிராம் தங்கம் வாங்கி அதை ஆயிரம் காசுகளாக்கி மாங்கல்யம் செய்யறது சாத்தியமா? பணம் இருக்கு. ஆனா அவகாசம் இல்லையே...? நான் வேணும்ன்னா

**காலை 11 மணி 32 நிமிஷத்துக்குள்ளே இந்தப் பரிகாரத்தைப் பண்ணினால்தான் பலன்!**

உங்களுக்குத் தேவையான பணம் தர்றேன். அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளை உங்களால பண்ண முடியுமா?”

‘‘சம்பந்தப்பட்டவங்க பண்ணினால்தான் பரிகாரம். இருந்தாலும் உங்க மகன் ராஜவேலு இறந்துட்டதால நீங்களும் வஜ்ரவேலுவும் கோயிலுக்குள்ளே போக முடியாது. அதனால இப்போதைக்கு நீங்க அந்த ஸ்ரீராமலிங்க சௌடேஸ்வரி அம்மன் கிட்டே பிரச்னை எல்லாம் சுமுகமாய் முடிஞ்ச பின்னாடி ‘ஸ்வர்ணதாரணம்’ பரிகாரத்தைச் செய்யறதாய் வேண்டிக்குங்க... அப்படி வேண்டிக்கிட்டாலே ஓரளவுக்குப் பரிகாரம் பண்ணின மாதிரிதான்.”

“நான் இப்பவே வேண்டிக்கிறேன் ஜோஸியரே!”

“அப்புறம் இன்னொரு முக்கியமான விஷயம். நான் வீட்டுக்குப் போனதும் பூமொழியோட ஜாதகத்தை மறுபடியும் ஒரு தடவை

பார்த்தேன். அப்பத்தான் இன்னொரு விஷயமும் தெரிஞ்சுது. ஜாதகத்துல கேது சந்திரனோடு சம்பந்தப்பட்டு இருப்பதால மனோகரனான சந்திரன் பூமொழியோட மனநிலையில் விபரீதமான எண்ணங்களைத் தோற்றுவிக்கலாம்... நீங்களும் வஜ்ரவேலும் ஜாக்ரதையாய் இருக்க வேண்டியது ரொம்பவும் முக்கியம்...!"

அம்பாள் அடிமை பேசிவிட்டு செல்போனை அணைத்துவிட பைரவமூர்த்தி நெருப்பாய் பெருமூச்சொன்றை வெளியேற்றினார். வஜ்ரவேல் தவிப்பான குரலில் கேட்டான்.

"அம்பாள் அடிமை ஜோஸியர் என்னப்பா சொல்றார்?"

"கோயிலுக்குப் போய் ஏதோ பரிகாரம் பண்ணணும்னு சொல்றார்."

''இது பரிகாரத்தால் தீர்ற பிரச்னை கிடையாதுப்பா."

"பின்னே?"

''அரிவாளால தீர்க்கப்பட வேண்டிய பிரச்னை."

**சா**யந்தரம் ஆறு மணி.

சொக்கம்புதூர் மின் மயானத்தில் ராஜவேலுவின் உடல் தகனம் செய்யப்படுவதற்கான கடைசி நிமிஷங்களில் இருக்க, பைரவமூர்த்தி கொந்தளிக்கிற மனதோடு உள்ளே போடப்பட்டு இருந்த திட்டில் உட்கார்ந்திருந்தார். அருகில் இறுகிய முகத்தோடு வஜ்ரவேல். கொஞ்சம் தள்ளி ஒரு மரத்துக்குக் கீழே நின்னு செல்போனில் யாரிடமோ தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்த அஸிஸ்டண்ட் கமிஷனர் இருங்கோவேள் இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு தன்னுடைய பேச்சை முடித்துக் கொண்டு பைரவமூர்த்தியை நெருங்கி நின்றார்.

''ஸார்! ஒரு நிமிஷம் உங்களோடு பேசலாமா?'' அழுது களைத்து சிவப்பேறிய விழிகளோடு இருந்த பைரவமூர்த்தி 'என்ன' என்பது போல் இருங்கோவேளைப் பார்க்க, அவர் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு குனிந்தார்.

"ஸார்! போலீஸ் க்யூ ப்ராஞ்ச் மூலமா உங்க பொண்ணு காதலிச்ச அந்தப் பையன் சர்வேஷ் பத்தின சில தகவல்கள் கிடைச்சிருக்கு ஸார்."

பைரவமூர்த்தி மின்சார

அதிர்ச்சிக்கு உட்பட்டவர் போல் நிமிர்ந்து உட்கார வஜ்ரவேல் ஆவேசமாய் பக்கத்தில் வந்தான்.

"என்ன தகவல்கள் ஸார்....?"

"அந்த சர்வேஷ் ஆர்.எஸ்.புரம் திவான் பகதூர் ரோட்டில் இருக்கிற 'அல்டிமேட் டெக்' என்கிற ஒரு ஐ.டி.கம்பெனியில் க்ரூப் ஹெட்டாய் வேலை பார்த்துட்டிருக்கான். சொந்த ஊர் கேரளாவில் இருக்கிற கண்ணனூர். அப்பா அம்மா கிடையாது. சொந்தக்காரங்க தயவுல எப்படியோ படிச்சு முன்னுக்கு வந்தவன். சாய்பாபா காலனி அழகேசன் ரோட்ல கோகுலம் அபார்ட்மெண்ட்ஸ்ல 'ஏ' ப்ளாக்ல தங்கியிருக்கான். உங்க பொண்ணு பூமொழியும் அந்த சர்வேஷும் கடந்த ரெண்டு வருஷமாவே ஒருத்தரை ஒருத்தர் விரும்பிட்டு வந்துருக்காங்க."

வஜ்ரவேல் இருங்கோவேளிடம் குரலை உயர்த்தினான்.

"இப்ப அவங்க எங்கே இருக்காங்க?"

"ஈச்சனாரி விநாயகர் கோயிலுக்குப் பக்கத்துல புதுசா ஒரு ஹோட்டல் வந்திருக்கு ஸார். அது ஒரு த்ரீ ஸ்டார் ஹோட்டல். 'கேட்ஸ் ஆஃப் பாரடைஸ்'ன்னு பேரு. அந்த ஹோட்டல்ல பூமொழியும் சர்வேஷும் வேற பேர்களைக் கொடுத்து ஸ்டே பண்ணியிருக்காங்களாம்..."

"இந்தத் தகவல்கள் எல்லாம் உங்களுக்கு எப்படி கிடைச்சுது ஸார்?"

"கமிஷனரோட உத்தரவுப்படி க்யூ ப்ராஞ்ச் போலீஸ் மஃப்டி டிரெஸ்ஸில் சிட்டியில் இருக்கிற எல்லா ஹோட்டல்களுக்கும் போய் ஹோட்டல் மானேஜர்கிட்டே பூமொழியோட போட்டோவைக் காட்டி விசாரணை பண்ணியிருக்காங்க. ஈச்சனாரி கோயிலுக்குப் பக்கத்துல இருக்கிற கேட்ஸ் ஆஃப் பாரடைஸ் ஹோட்டல்ல போய் விசாரிக்கவும் மானேஜர் போட்டோவைப் பார்த்துட்டு இங்கேதான் ஸ்டே பண்ணியிருக்காங்கனு உண்மையைச் சொல்லிட்டார்."

"அந்த போலீஸார் உடனடியாய் போய் பூமொழியையும்

அந்தப் பையனையும் மடக்க வேண்டியதுதானே!"

"மடக்கப் போயிருக்காங்க ஸார்... ஆனா ரூம் பூட்டியிருந்தது. ரூமுக்குள்ளே என்ன இருக்குன்னு பார்க்கிறதுக்காக டூப்ளிகேட் சாவியை உபயோகப்படுத்தி திறந்து பார்த்துருக்காங்க. ரெண்டு சூட்கேஸ் இருந்திருக்கு. அதையும் ஓப்பன் பண்ணிப் பார்த்துருக்காங்க. உள்ளே



புதுப்பட்டுப்புடவை, பட்டு வேட்டி, தாலிக்கொடி அம்பதாயிரம் ரூபாய் பணம் இருந்துருக்கு!"

பைரவமூர்த்தி நெருப்பு உமிழும் பார்வையோடு எழுந்தான். பல்லிடுக்கில் கர்ஜித்தார். "ரெண்டும் எங்கேயாவது ஊர்மேயப் போயிருக்கும். எப்படியும் ராத்திரிக்கு வருவாங்க. வஜ்ரவேல்!"

"அப்பா...!"

"உன் தம்பி ராஜவேலுவோட காரியங்களை முடிச்சுட்டு நீயும் நானும் அந்த ஹோட்டலுக்குப் போறோம். அவங்களை மடக்கிப் பிடிக்கிறோம். நம்ம வீட்டுக்கு கொண்டுவந்து ராஜவேலுவோட போட்டோவுக்கு முன்னாடி வெச்சு..."

இருங்கோவேள் அவசர அவசரமாய் குறுக்கிட்டார்.

"ஸார்...! அந்தப் பையனையும் சரி, உங்க பொண்ணையும் சரி, ஒண்ணும் பண்ணிடாதீங்க... பெரிய பிரச்னையாயிடும். சட்டம் முன்னே மாதிரியில்லை. வெறும் வாயை மென்னுட்டிருக்கிற மீடியாக்களுக்கு இது காரப்பொரி மாதிரியாயிடும். உங்களுக்கு இருக்கிற செல்வாக்கு ஓரளவுக்குத்தான் செல்லுபடியாகும். நீங்க கொஞ்சம் ஏமாந்தாலும் 'குண்டாஸ் ஆக்ட்' உங்க மேல பாய்ஞ்சுடும்."

"என்ன ஏஸிபி ஸார்... பயமுறுத்தறீங்க...? எங்க ஃபேமிலி லாயர் கோதண்டராமன் இருக்கும்போது எங்களுக்கென்ன கவலை? சட்டம் ஒரு ஓட்டைப் பானைன்னு உங்களுக்கும் தெரியும். எங்களுக்கும் தெரியும். அந்த ரெண்டு ஓடுகாலிகளுக்கும் எது மாதிரியான தண்டனை தர்றதுன்னு முடிவு பண்ண வேண்டியது நாங்க. அதுக்கப்புறம் நீங்க சட்டப்படி எங்களை என்ன பண்ணணுமோ பண்ணுங்க. அடுத்த இருபத்திநாலு மணி நேரத்துக்குள்ளே மறுபடியும் நாங்க வீட்ல இருப்போம்."

"ஸார்! எதுக்கும் ஒரு தடவை

ரெண்டு தடவை யோசனை பண்ணி...”

“ஒரு புண்ணாக்கும் பண்ண வேண்டியதில்லை. அந்த ஹோட்டல் எங்கேயிருக்குன்னு சொன்னீங்க?”

“ஈச்சனாரிக்குப் பக்கத்துல...”

“அந்த ரெண்டு பேரும் தப்பிச்சுட்டுப் போயிடப் போறாங்க. ஹோட்டல் மானேஜர் கிட்டே சொல்லிட்டீங்களா?”

“சொல்லிட்டேன் ஸார்...! அதுவுமில்லாமே க்யூ ப்ராஞ்சைச் சேர்ந்த ரெண்டு பேர் பூமொழியையும், சர்வேஷையும் எதிர்பார்த்து வெயிட் பண்ணிட்டு இருக்காங்க... அவங்க ஹோட்டலுக்கு வந்ததும் எனக்கு உடனடியாய் போன் பண்ணி தகவல் கொடுப்பாங்க...!

பைரவமூர்த்தி தன்னுடைய சுட்டு விரலை உயர்த்தினார்.

“நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும் ஏஸிபி... அந்த ரெண்டு பேரையும் எங்ககிட்டதான் ஒப்படைக்கணும்...”

இருங்கோவேள் தன்னுடைய சம்மதத்தைத் தெரிவிக்க மனமில்லாமல் மெல்ல தலையாட்டி வைத்தார்.

இரவு எட்டு மணி.

பொள்ளாச்சி ரோட்டில் போலீஸ் ஜீப் முன்னால் போய்க் கொண்டிருக்க, பின்னால் தன்னுடைய இன்னோவா காரில் வஜ்ரவேலுவுக்குப் பக்கத்தில்

**அந்தப் பையனையும் சரி, உங்க பொண்ணையும் சரி, ஒண்ணும் பண்ணிடாதீங்க...**

உட்கார்ந்திருந்தார் பைரவமூர்த்தி. வஜ்ர வேல் காரை ஓட்டிக் கொண்டிருந்தான். அந்த நேரத்தில் பொள்ளாச்சி ரோடு போக்குவரத்து இல்லாமல் துடைத்து வைத்த மாதிரி இருக்க, இன்னோவா எய்துவிட்ட அம்பாய் பறந்து கொண்டிருந்தது.

“வஜ்ரவேல்!”

“என்னப்பா...?”

“அந்த ரெண்டு பேரையும் ஹோட்டலிலேயே போட்டுட்டா என்ன... நம்ம வீடு வரைக்கும் கொண்டு போகணுமா என்ன?”

“நானும் அதைப்பத்தித்தான் யோசனை பண்ணிட்டிருக்கேன்ப்பா... அந்த ரெண்டு நாய்களும் நம்ம வீட்டு வாசற்படி ஏறக்கூடாது.”

“ஏஸிபி இருங்கோவேள் முன்னே மாதிரியில்லை. சட்டத்தைப் பத்தி நிறைய பேசறார். மீடியா பீப்பிள், குண்டாஸ் ஆக்ட் அது இதுன்னு சொல்லி ரொம்பவே பயமுறுத்துறார்...!”

‘‘இந்தத் தடவை கரன்ஸியைக் கொஞ்சம் அதிகமாய் காட்டிட வேண்டியதுதான்...!’’

கார் ஈச்சனாரி கோயிலைத் தாண்ட விநாயகர் ஒரு விநாடிக்கும் குறைவான நேரத்துக்கு அறுகம்புல் மாலையோடு காட்சி கொடுத்துவிட்டு மறைந்தார்.

மேலும் ஒரு கிலோ மீட்டர் பயணம் செய்ததும் ரோட்டின் வலதுபக்கம் ஐந்து மாடிகளோடு அந்த ‘கேட்ஸ் ஆஃப் பாரடைஸ்’ ஹோட்டல் தெரிந்தது. போலீஸ் ஜீப் ஹோட்டலை விட்டுத்தள்ளி ஒரு மரத்துக்குக் கீழே போய் நிற்க, இன்னோவாவும் பின்னால் போய் நின்றது.

ஜீப்பினின்றும் இருங்கோவேள் இறங்கி வந்து காரை நெருங்கி பைரவமூர்த்தியிடம் குனிந்தார்.

“ஸார்! ஹோட்டலை விட்டு வெளியே போன அந்த ரெண்டு பேர் இன்னமும் திரும்பலை. காரை இங்கேயே நிறுத்திக்கலாம். நாம உள்ளே போய் ஹோட்டலில் இருக்கிற ஒரு அறையில் வெயிட் பண்ணுவோம். அவங்க வந்ததும் மடக்கிடலாம்.”

“அப்பா! நீங்க ஏஸிபியோடு போங்க... நான் காரை சரியாய் பார்க் பண்ணிட்டு வந்துடறேன்!” வஜ்ரவேல் சொல்ல, பைரவமூர்த்தி காரினின்றும் இறங்கி அவரோடு நடந்தார்.

வஜ்ரவேல் காரை நகர்த்தி அந்தப் பெரிய ஆலமரத்துக்குப் பின்னால் மறைவாய் நிறுத்தி லாக் செய்து இறங்கினான்.

செல்போன் ஒலித்தது.



சட்டைப்பையில் இருந்த தன் செல்போனை எடுத்து அழைப்பை யார் என்று பார்த்தான். ஒரு புது எண். செல்போனை இடது காதுக்கு ஒற்றி ‘யாரு’ என்று கேட்டுக்கொண்டே ரோட்டைக் கடந்தான்.

செல்போனில் மறுமுனையில் மௌனம்.

“யாரு?” கத்தி கேட்டுக்கொண்டே ரோட்டின் மையத்துக்கு வந்து இருந்தபோது பக்கவாட்டில் அந்த சத்தம் கேட்டது.

திரும்பிப் பார்த்தான்.

முகப்பு விளக்குகளை எரிய விடாமல் ராட்சஸ வேகத்தில் வந்த அந்த டாங்கர் லாரி அவன் மீது மோதியது. சக்கரங்களுக்குக்கீழே போட்டு தேய்த்து அரைத்து, ஒரு பத்து மீட்டர் நீளமுள்ள ரத்தக் கோடாய் மாற்றிவிட்டு இருளில் பறந்து மறைந்தது.

(தொடரும்)

6 வார அதிரடித் தொடர்

**போலீஸ் கமிஷ்னர் ராம்பிரகாஷ் கொதித்துப் போனவராய் ‘இன்-கேமரா’ செல் மீட்டிங்கில் தனக்கு எதிரே உட்கார்ந்திருந்த பத்துக்கும் மேற்பட்ட போலீஸ் அதிகாரிகளைப் பார்த்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தார். நேரம் நள்ளிரவு பன்னிரண்டு மணியைத் தாண்டியிருந்தது.**

“பைரவமூர்த்தி ஒரு சாதாரண நபர் கிடையாது. இந்த மாவட்டத்தின் அரசியல் செல்வாக்கோடு கூடிய ஒரு முக்கியப்புள்ளி. அவரோட ஜாதீய பேரவைக்குத் தலைவர். அப்படிப்பட்ட ஒருத்தரோட வீட்ல நடந்த ஒரு சம்பவம் இன்னிக்கு இந்த மாவட்டத்தையே புரட்டி எடுத்துட்டிருக்கு. நல்ல வேளையாய் பாதுகாப்பு ஏற்பாடுகளை முன்னெச்சரிக்கையோடு செய்ததனால பெரிய அளவில் அசம்பாவிதங்கள் நிகழலை. இன்னிக்கு ஒரே நாளில் பைரவமூர்த்தியின் ரெண்டு மகன்களான ராஜவேலுவும், வஜ்ரவேலுவும் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டு இருக்காங்க. இந்தக் கொலைகளுக்கான பின்னணியில் தன்னோட மகள் பூமொழியும், அவளுடைய காதலன் சர்வேஷூம்தான் சம்பந்தப்பட்டு இருக்காங்கன்னு பைரவமூர்த்தி ஆணித்தரமாய் சொல்றார். கூடப் பொறந்த தங்கையே அண்ணன்களை கொலை செய்வாளான்னு கேட்டா ‘பூமொழி மனநலம் சரியில்லாத ‘ஸ்பிலிட் பர்சனால்டி’ன்னு சொல்லப்படுகிற மனச்சிதைவுக்கு உட்பட்ட பெண் அவள்’ன்னு சொல்றார். இது

ஓரளவுக்கு நம்பறமாதிரியும் இருக்கு. நம்ப முடியாதது மாதிரியும் இருக்கு.

லுக் மிஸ்டர் இருங்கோவேள்...! இதை ஒரு மர்டர் பிரச்னையா பார்க்காமே ஜாதிப் பிரச்னையா பார்த்து ரொம்பவும் ஜாக்கிரதையா ஹேண்டில் பண்ணணும். பைரவமூர்த்தியை நம்மால காப்பாத்த முடியலைன்னா பெரிய அளவுக்கு ஒரு ஜாதிக் கலவரம் ஏற்படறதைத் தடுக்க முடியாது. நாம இப்ப உடனடியா செய்ய வேண்டிய காரியம் அந்தப் பொண்ணு பூமொழியையும், அவளோட லவ்வர் சர்வேஷையும் தேடிக் கண்டுபிடிக்கிறதுதான்!

அதுக்குத் தேவையான நடவடிக்கைகள் எடுங்க. விடியறதுக்குள்ள எனக்கு ரிசல்ட் வேணும்...! இல்லேன்னா மினிஸ்டர்க்கு முன்னாடி நான் நின்னு அந்த ஆளு பேசற கெட்ட வார்த்தையை எல்லாம் கேட்க வேண்டியிருக்கும்!"

கமிஷனர் ராம்பிரகாஷ் ஏறக்குறைய கர்ஜித்துவிட்டு தன் இருக்கையினின்றும் எழுந்து கொண்டார்.

**ம**றுநாள் காலை பதினொரு மணி.

பங்களாவின் முகப்பறையின் சுவரில் ராஜவேலுவும் வஜ்ரவேலுவும் போட்டோக்களாக மாறி ரோஜா மாலைகளுக்கு நடுவே தொங்கிக் கொண்டிருக்க... பைரவமூர்த்தி அழுது அழுது களைத்துப்போன முகத்தோடு ஈஸிசேருக்கு சாய்ந்து உட்கார்ந்திருந்தார்.

சுற்றிலும் உறவு ஜனம் பாலிவினைல் நாற்காலிகளில் அமர்ந்து கனத்த நிசப்தம் காத்து தங்களுடைய சோகத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

பக்கத்தில் உட்கார்ந்திருந்த அம்பாள் அடிமை ஜோதிடர் அவருடைய கையை மெல்லப் பற்றினார்.

"நான் எதிர்பார்த்ததைவிட மோசமான சம்பவங்கள் நடந்திருக்கு. உங்களுடைய வாரிசுகள் ரத்தம் சிந்த வேண்டிய நேரம் இது. ஆனா உயிர் போகிற அளவுக்கு இருக்கும்ன்னு நான் நினைக்கலை. நான் சொன்ன மோசமான நேரம் முடிய இன்னும் சரியாய் ஒரு மணி நேரம் இருக்கு. இந்த ஒரு மணி நேரமும் நீங்க அமைதியாய் இருக்கிறது நல்லது." அம்பாள் அடிமை சொல்லிக்கொண்டு இருக்கும்போதே பங்களாவின் போர்டிகோவில் போலீஸ் ஜீப் வந்து நின்றது.

அஸிஸ்டண்ட் போலீஸ் கமிஷனர் இருங்கோவேள் படியேறி உள்ளே வர, பைரவமூர்த்தி தளர்வாய் எழுந்து நின்றார்.

"வாங்க ஏ.ஸி.பி. ஸார்" தனக்கு எதிரே நாற்காலியை காண்பித்துவிட்டு தானும் உட்கார்ந்தார்.

''எம் பொண்ணைப் பத்தின தகவல் ஏதாவது கிடைச்சுதா?"

''இல்ல... ஸார்... ஏதாவது வெளி மாநிலத்துக்கு போயிட்டாங்களோன்னு எனக்கொரு சந்தேகம். அதான் உங்களை என்கொயர் பண்ண வந்தேன். உங்களுக்கு வெளிமாநிலங்களில் ரிலேட்டிவ்ஸ் யாராவது இருக்காங்களா?"

"அப்படி யாரும் இல்லை..."

"கொஞ்சம் நல்லா யோசனை பண்ணிப் பாருங்க. தூரத்து உறவாய்க்கூட இருக்கலாம்!"

பைரவமூர்த்தி சில விநாடிகள் கண் மூடி யோசனையாய் இருந்துவிட்டு எழுந்தார்.

"வாங்க போலாம்."

"எங்க ஸார்?"

"ஒருத்தர்கிட்டே பேசிப் பார்த்தா விவரம் கிடைக்கலாம். போன்ல பேசினா சரிப்பட்டு வராது. வாங்க நேர்ல போயிடலாம்!"

"யார் ஸார் அது... நீங்க பேரையும் அட்ரஸையும் சொல்லுங்க... நான் போய் விசாரிச்சுக்கிறேன்...!"

"நீங்க போனா அவர்கிட்டயிருந்து உண்மை வெளியே வராது. நானும்கூட வந்தாத்தான் அவர் வாயைத் திறப்பார்."

"ஸார்... துக்க காரியம் நடந்த வீடு இது. உறவு ஜனம் நிறைய வீடு பூராவும் இருக்காங்க... இந்த நேரத்துல நீங்க வெளியே வர்றது அவ்வளவு உசிதமாய் எனக்குப் படலை."

''துக்கம் நடந்த வீடுதான்...! அதுக்காக பார்க்க வேண்டிய வேலைகளைப் பார்க்காமே இருக்க முடியுமா...? வாங்க போலாம். கார் வேண்டாம். உங்க ஜீப்பிலேயே போய்ட்டு வந்துடலாம்...!"

சொல்லிவிட்டு போர்டிகோவை நோக்கி நடக்க ஆரம்பித்தார் பைரவமூர்த்தி.

**ஆர்.**எஸ். புரம் சம்பந்தம் ரோட்டுக்குள் நுழைந்தது போலீஸ் ஜீப்.

''அதோ... அந்த வீடுதான்...!'' பைரவமூர்த்தி சுட்டிக்காட்டிய ஊதாநிற டிஸ்டெம்பர் பங்களாவுக்கு முன்பாய் போய் ஜீப் நின்றது.



**"உன் காதலனை கட்டி வச்சி உதைக்கப் போறேன்..."**

**"முதல்ல கட்டி வையுங்கப்பா... நானே உதைச்சிக்கிறேன்..."**

**- பி.ஜி.பி. இசக்கி, அம்பாசமுத்திரம்.**

அஸிஸ்டண்ட் போலீஸ் கமிஷனர் இருங்கோவேள் ஜீப்பினின்றும் எட்டிப்பார்த்தார். காம்பௌண்ட் கேட்டின் வலது பக்கச் சுவரில் பதித்து வைத்திருந்த பெயர்ப்பலகையைப் பார்த்ததும் முகம் மாறிப் போனவராய் பைரவமூர்த்தியை ஏறிட்டார்.

"என்ன ஸார்... உங்க ஃபேமிலி லாயர் கோதண்டராமன் வீட்டுக்கு கூட்டிட்டு வந்திருக்கீங்க...?"

''நாம அவரைத்தான் பார்க்கப் போறோம்!'' சொல்லியபடி பைரவமூர்த்தி இறங்கி நடக்க ஆரம்பித்துவிட, இருங்கோவேளும் அவரைத் தொடர்ந்தார்.

அழைப்பு மணியின் பொத்தானை அழுத்தினார்.

அரை நிமிஷ அவகாசத்தில் அந்த அகலமான ரோஸ்வுட் கதவு திறக்கப்பட லாயர் கோதண்டராமன் சந்தோஷம் இல்லாமல் வரவேற்றார்.

"வாங்க பைரவமூர்த்தி!"

''இவர் ஏ.ஸி.பி. இருங்கோவேள்."

''தெரியும்... கோர்ட்ல பார்த்திருக்கேன்!"

"பூமொழியைப் பத்தி பேசணும்ன்னு சொன்னார். அதான் நேரிடையாவே கூட்டிட்டு வந்துட்டேன்..."

''பேசறதுக்கு முன்னாடி பார்த்துடலாமே...?"

இருங்கோவேள் திகைத்தார்.

"என்னது... பார்க்கிறதா... யாரை?"

"உள்ளே வாங்க... தெரியும்..." லாயர் கோதண்டராமன் பங்களாவுக்கு உள்ளே கூட்டிப்போய் ஒரு அறைக்கதவின் தாழ்ப்பாளை நீக்கி கதவைத் திறந்துவிட -

**"உங்களுடைய வாரிசுகள் ரத்தம் சிந்த வேண்டிய நேரம் இது!"**

உள்ளே ஒரே சோபாவில் பக்கம் பக்கமாய் உட்கார்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருந்த பூமொழியும் சர்வேஷும் பார்வைக்குக் கிடைத்தார்கள்.

இருங்கோவேள் அதிர்ந்து போய் திணறிக்கொண்டு இருக்கும்போதே கோதண்டராமன் சோபாவைக் காட்டினார்.

"உட்கார்ங்க ஏ.ஸி.பி. ஸார்."

இருங்கோவேள் தொப்பியைக் கழற்றி கக்கத்தில் இடுக்கிக் கொண்டே முகம் முற்றிலும் மாறிப் போனவராய் பைரவமூர்த்தியிடம் திரும்பினார்.

''என்ன ஸார்... உங்க பொண்ணும், சர்வேஷும் இங்கே இருக்காங்க... அவங்க ஓடிப்போயிட்டதா சொன்னது...?"

''பொய்...!'' என்றார் பைரவமூர்த்தி.

"எ... எ... எதுக்காக இந்தப் பொய்?"

''ராஜவேல், வஜ்ரவேல்

என்கிற நரகாசுரர்களிடமிருந்து என்னோட பொண்ணையும், எனக்கு மாப்பிள்ளையாய் வரப்போகிற சர்வேஷையும் காப்பாத்திக்க எனக்கு வேற வழி தெரியலை...”

இருங்கோவேள் இன்னமும் உச்சபட்ச வியப்புக்குப் போனார். “ஸ... ஸார்... நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு புரியலை?”

அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் இருந்த பூமொழி இப்போது வாயைத் திறந்தாள்.

“நான் புரியும்படியா சொல்றேன்... ஸார். நானும் சர்வேஷும் கடந்த ரெண்டு வருஷ காலமாய் ஒருத்தரையொருத்தர் விரும்பிட்டிருக்கோம். என்னோட காதலைப்பற்றி வீட்ல சொல்ல எனக்கு பயமா இருந்தது. காரணம் அப்பாவுக்கும் ரெண்டு அண்ணன்களுக்கும் ஜாதியும் அந்தஸ்தும்தான் முக்கியம். இருந்தாலும் போன மாசத்துல ஒருநாள் அண்ணன்கள் வீட்டில் இல்லாத நேரத்துல அப்பாவோட கால்கள்ல விழுந்து கதறி என்னோட காதலை கல்யாணத்துல முடித்து வைக்கும்படியா அழுதேன். வெகு நேர யோசனைக்குப் பின்னாடி அப்பா ஒத்துக்கிட்டார். அதுக்கு அப்பா சொன்ன ஒரு விஷயம் எனக்கு பெரிய அதிர்ச்சியாய் இருந்தது.”

பூமொழி மேற்கொண்டு பேசமுடியாமல் சேலைத்தலைப்பால் முகத்தைப் பொத்திக் கொண்டு அழ, பைரவமூர்த்தி பேச ஆரம்பித்தார்.

“அஞ்சு வருஷத்துக்கு முன்பு வரை ராஜவேலு, வஜ்ரவேலு மேல எனக்கு அளவுகடந்த பாசம் இருந்தது. ரெண்டு பேரையும் என் ரெண்டு கண்களாய் நினைச்சுட்டிருந்தேன். ஆனா என்னோட மனைவி ருக்மிணி இதய நோயால பாதிக்கப்பட்டு ஹாஸ்பிடல்ல அட்மிட்டாகியிருந்தபோது டாக்டர் பன்னீர் செல்வம் என் மனைவி உயிர் பிழைக்கணும்ன்னா உடனடியா சிங்கப்பூரிலிருந்து லைஃப் ஸேவிங் ட்ரக்ஸ் வரவழைச்சு ட்ரீட்மெண்ட் கொடுக்கணும்ன்னு சொன்னார். ராஜவேலுவும் வஜ்ரவேலுவும் அந்த மருந்தை வரவழைக்கிற முயற்சியில் இறங்கி சிங்கப்பூரில் இருந்த ஃப்ரெண்ட் ஒருத்தர்கிட்ட பேசிக்கிட்டு இருந்தாங்க. ஆனா அவங்க அதுல முழுமனதோடு ஈடுபடலைன்னு என்னோட மனைவி இறந்தபிறகுதான் தெரிஞ்சுகிட்டேன். ஒரே நாளில் அந்த மருந்தை வரவழைக்கக்கூடிய சாத்தியம் இருந்தும் வேணும்ன்னே இழுத்தடிச்சு மூணுநாளைக்குப் பின்னாடிதான்

அந்த மருந்து வந்து சேர்ந்தது. டாக்டர் அதுபற்றி அவங்க கிட்ட கேட்டபோது ரெண்டு பேரும் சிரிச்சுகிட்டே 'கிழவி போய்ச் சேரட்டும். அவ உயிரோடு இருந்தா அப்பா சம்பாதிச்ச சொத்தை மகள் பூமொழிக்கும் சேர்த்து மூணு பங்காப் பிரிச்சு உயில் எழுதச் சொல்லி அப்பாவை நச்சரிச்சு சம்மதிக்க வெச்சுருவா..!'ன்னு சொல்லியிருக்காங்க. டாக்டர் என்னை ஒரு நாள் சந்திச்சு இந்த விஷயத்தைச் சொன்னபோது அதிர்ந்து போயிட்டேன். அந்த நிமிஷத்தில் இருந்தே ராஜவேலுவும் சரி, வஜ்ரவேலுவும் சரி, என்னோட கண்களுக்கு மகன்களாத் தெரியலை. ரெண்டு கட்டுவிரியன் பாம்புகள் மாதிரி தெரிஞ்சாங்க. ஆனா வெளிப்படையா நான் வெறுப்பைக் காட்டினா அது என்னோட உயிர்க்கும், பூமொழியோட உயிர்க்கும் ஆபத்தா முடியும்ன்னு நினைச்சு பாசத்தோட இருக்கிற மாதிரி காட்டிகிட்டேன். ரெண்டு பேரையும் சத்தம் இல்லாமே தீர்த்துக்கட்ட ஒரு சரியான தருணத்தையும் எதிர்பார்த்துட்டிருந்தேன். அந்த நேரத்துலதான் பூமொழி தன்னோட காதலைச் சொல்லி காலில் விழுந்து கதறி அழுதா. இந்த காதல் விவகாரம் ராஜவேலுக்கும், வஜ்ரவேலுக்கும் தெரிகிற பட்சத்தில் 'பூமொழி - சர்வேஷ்' ரெண்டு பேருமே உயிரோடு இருக்க வாய்ப்பில்லைன்னு என்னோட மனசுக்குப்பட்டது."

இருங்கோவேள் குறுக்கிட்டார்.

"அதான் ரெண்டு பேரையும் ஈச்சனாரிக்குப் பக்கத்தில் இருக்கிற கேட்ஸ் ஆஃப் பாரடைஸ் ஹோட்டல்ல தங்க வெச்சீங்களா?"

''ஆமா... ஆனா உங்க க்யூ ப்ராஞ்ச் போலீஸ் ஆட்கள் அந்த இடத்தை மோப்பம் பிடிச்சதும் நான் உடனடியா பூமொழிக்கு தகவல் குடுத்து அங்கிருந்து புறப்பட்டு லாயர் கோதண்டராமன் வீட்டுக்கு வரச்சொல்லிட்டேன்."

"ஸோ.. உங்க ஸ்டேட்மெண்ட்படி பார்த்தா உங்க மகன்களோட கொடூரமான மரணங்களுக்குக் காரணம் நீங்கதானா?"

"நானில்லை... ஏ.ஸி.பி. ஸார்! நான் அந்த விஷப்பாம்புகளைப் போட்டுத்தள்ள 'தாயப்பன்' என்கிற எனக்கு விசுவாசமான ஒரு ஆளை ஏற்பாடு

"சாரி மாத்திட்டு வந்துடறேன்னு எதுக்கு தெருப்பக்கம் போறே?"

"கடையில நேத்து வாங்கிட்டு வந்த புடவை, கலர் பிடிக்கலைனு மாத்தப் போறேன்...!"

- சீர்காழி வி.ரேவதி.



பண்ணினது உண்மை. அவனும் அதுக்கான முயற்சிகளில் ஈடுபட்டது உண்மை. ஆனா தாயப்பனுக்கு முன்னாடியே வேற யாரோ திட்டம் போட்டு ராஜவேலுவை விஷப்புகையாலும், வஜ்ரவேலுவை டாங்கர் லாரியாலும் முடிச்சுட்டாங்க... எப்படியோ அந்த ரெண்டு விஷ ஜந்துகளும் இப்போ உயிரோடு இல்லை...!"

"உங்க ரெண்டு மகன்களையும் தீர்த்துக் கட்டினது யாராயிருக்கும்ன்னு நினைக்கறீங்க?"

"தெரியலை... எங்க ஜாதியில் பங்காளிகளுக்கும் பஞ்சமில்லை. பகையாளிகளுக்கும் பஞ்சமில்லை. ரெண்டு பேரையும் தீர்த்துக் கட்டின அந்தப் புண்ணியவான்கள் யார்ங்கிறதை இனிமேல் நீங்கதான் கண்டுபிடிக்கணும்!"

இருங்கோவேள் புன்னகைத்தார்.

"கண்டுபிடிச்சாச்சு மிஸ்டர் பைரவமூர்த்தி" ஏராளமான ஆச்சர்யக்குறிகளோடு எல்லோருடைய பார்வையும் அவர்மேல் நிலைத்தது.

"யா... யாரு...?"

"கோட்டைமேடு கஜாவும், உக்கடம் பூபதியும். இந்த ரெண்டுபேரும் கூலிப்படை ஆட்கள். ராஜவேலு, வஜ்ரவேலைத் தீர்த்துக்கட்ட கஜாவுக்கும், வஜ்ரவேலு ராஜவேலுவைத் தீர்த்துக்கட்ட பூபதிக்கும் ஒருத்தர்க்குத் தெரியாமே இன்னொருத்தர்க்கு பணம் குடுத்து இருக்காங்க. ரெண்டு பேரையும் மடக்கிட்டோம். இப்போ அவங்க பி-1 போலீஸ் ஸ்டேஷனின் லாக்கப்புக்குள்ளே இருக்காங்க..." என்று பேசி முடித்த இருங்கோவேள் பைரவமூர்த்தியிடம் திரும்பினார்.

**மகன்களின் கொலை மரணங்களுக்கு காரணம்?**

"இந்த விஷயத்தில் எனக்கு இருக்கிற ஒரு சந்தேகத்தை உங்ககிட்டே கேட்கலாமா?"

"ம்... கேளுங்க...!"

"பூமொழிக்கு மனநலம் சரியில்லைன்னு நீங்க சொன்னது உண்மையா... பொய்யா?"

"பொய்."

"எதுக்காக அந்தப் பொய்?"

"வஜ்ரவேலுக்கு மரண பயத்தை உண்டாக்கி அவன் படற அவஸ்தையைப் பார்த்து உள்ளூர சந்தோஷப்படத்தான். ஆனா அவனோட சாவுக்கு இவனும் இவனோட சாவுக்கு அவனும்தான் காரணமா இருப்பாங்கன்னு நான் கொஞ்சம்கூட நினைச்சுப் பார்க்கலை...!"

"நான் நினைச்சேன்ப்பா" என்றாள் பூமொழி.

"எப்படி?"

"ஒரு பெண்ணோட பாவமே பொல்லாதது. அந்தப் பெண்ணே அம்மாவா இருந்துட்டா அந்தப் பாவம்... ரொம்ப... ரொம்ப... ரொம்ப பொல்லாதது."

**(முற்றும்)**